مكاتبة النبي ﷺ الى الملوك والامراء

– على اسلوب القصص للأطفال –

# உண்மையைத் தேடி ...!

## - சீறா நாடகம் -

### (அண்ணல் நபி (ஸல்) அவர்கள் பிற நாடுகளின் ஆட்சியாளர்களுக்கு அனுப்பிய அழைப்பு மடல்களின் பின்னணியில்)


எழுத்து & வடிவம்

**K.J. மஸ்தான் அலீ பாகவி, உமரி**

**(அபூ காலித்)**


### நன்மக்கள் கிடைப்பார்கள் என நம்புகிறேன்

### முன்னுரை

சுவூதி அரோபியா உனைஸா இஸ்லாமிக் சென்டரின் வாராந்திர நிகழ்ச்சிகளுக்கு வந்துகொண்டிருந்த நண்பர்கள் சிலர் - உரைகளில் வரலாற்று நிகழ்ச்சிகளை அதிக அளவில் குறிப்பிடுமாறு கேட்டுக்கொண்டனர். அதன்படி வரலாற்று நிகழ்வுகளை புதிதாக ஆய்வு செய்யவும் அதன் அடிப்படையில் உரை நிகழ்த்தவும் நான் முடிவு செய்தேன்.

நபிவரலாற்றில் தாயிப் நகரப் பயணம் மிகவும் முக்கியமானது. அது தொடர்பான நிகழ்வுகளில் நமக்குப் பல்வேறு படிப்பினைகள் அமைந்துள்ளன.

மக்காவின் நிராகரிப்பாளர்களைப்போன்றே தாயிப் நகர மக்களும் இஸ்லாத்தின் அழைப்பை ஏற்றுக்கொள்ள மறுத்ததுடன் நபி (ஸல்) அவர்களைத் தரம் தாழ்ந்து பேசவும் ஏசவும் செய்தார்கள் என்பது மட்டுமல்ல மாநபியவர்களின் பொற்பாதங்களில் குருதி வடியும் அளவு கற்களை வீசச் செய்து கொடுமையும் புரிந்தார்கள். அறியாமையினால் அந்த மக்கள் அள்ளி வீசிய ஏளனப் பேச்சுகளைச் சகித்துக்கொண்டும் வழிந்தோடிய இரத் தத்தைத் துடைத்துக்கொண்டும் மிகுந்த மன வேதனையுடன் நபியவர்கள் திருமக்காவுக்கே திரும்பி வந்து கொண்டிருந்தபோது -

மலக்கு (வானவர்) தோன்றி, முஹம்மதே, இந்த இருமலைகளையும் புரட்டிப்போட்டு இவ்விரு ஊர்களின் கொடியோரை அழித்து விடவா? சொல்லுங்கள்., உங்கள் விருப்பம்போல் செய்கிறேன் என்று கேட்டுக் கொண் டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் அளித்த பதில் இதுதான்:

வேண்டாம்! பிற்காலத்தில் அல்லாஹ் இவர்களிலிருந்து தோற்றுவிக்கும் சந்ததிகளில் -இறைவனை மட்டுமே வணங்கக்கூடிய, இணைவைப்பைத் தவிர்க்கக்கூடிய நன்மக்கள் கிடைப்பார்கள் என நான் எதிர்பார்க்கிறேன் (நூல்: புகாரி, அறிவிப்பு: ஆயிஷா (ரலி) அவர்கள்)

- அப்படித்தான் நடந்தது. அபூ ஜஹ்ல் என்பவன் நபி(ஸல்) அவர்களின் பரம விரோதி என்பது யாவரும் அறிந்ததே. ஆனால் அவனுடைய புதல்வர் இக்ரிமா (ரலி)அவர்கள் இஸ்லாத்தில் சேர்ந்தார்., சிறப்பும் உயர்வும் பெற்றார்.

இதேபோன்று இஸ்லாத்தை எதிர்த்துக்கொண்டும் முஸ்லிம்களுடன் தொடர்ந்து யுத்தம் செய்துகொண்டும் இருந்த அபூ சுப்யான், காலித் பின் வலீத் போன்றோர் பின்னாட்களில் இஸ்லாத்தில் இணைந்தார்கள்.

அபூ சுப்யானைப்போல் அவருடைய இரு புதல்களும் -யஜீதும் முஆவியாவும் இஸ்லாத்தில் இணைந்தார்கள். முதலாமவர் மிகப் பெரிய போர்த்தளதியாகத் திகழ்ந்தார். இரண்டாமவர் வஹி (எனும் இறையருட் செய்தி)யின் எழுத்தர்களில் ஒருவராகப் பணியாற்றும் பாக்கியம் பெற்றார். காலித் பின் வலீத் அவர்களோ, இறைவழிப்

போர்களுக்குத் தளபதியாகப் பொறுப்பேற்று சாதனைகள் பல புரிந்து **அல்லாஹ்வின் போர்வாள்** என்று புகழ் பெற்றார்.

- மக்கா வெற்றிக்குப் பிறகு தாயிப் நகர மக்களும் படிப்படியாக இஸ்லாத்தைத் தழுவினார்கள்!

இந்தப் பிரபலங்கள் இஸ்லாத்தைத் தழுவிய நிகழ்ச்சிகளை -நன் மக்கள் கிடைப்பார்கள் என நம்புகிறேன் என நபியவர்கள் சொன்ன பதிலுடன் ஒப்பிட்டு விரிவாக நான் நிகழ்த்திய தொடர் உரைகள் அனைவரையும் கவர்ந்தன.

அழைப்புப் பணியில் ஈடுபாடு உடையவர்களுக்கு மிகுந்த பொறுமையும் பரந்த பார்வையும் தேவை. அத்து டன் அப்பணியின் பயனாக எதிர்காலத்தில் மலரவிருக்கும் பாக்கியமிக்க நல்விளைவுகளின் இலட்சியக் கனவை முன்வைத்து அவர்கள் உற்சாகம் பெற்றிட வேண்டும் -இந்த வரலாற்று நிகழ்ச்சிகள் உணர்த்தும் முக்கியமான பாடங்கள் இவையே!

-இதன் பிறகு ரோமப் பேரரசர் ஹெர்குலிஸை அபூ சுப்யான் சந்தித்து உரையாடிய சுவையான நிகழ்ச்சியை உரையின் கருவாக எடுத்துக்கொண்டேன். இது அபூ சுப்யான் இஸ்லாத்தைத் தழுவும் முன்பு நடந்ததாகும்.

ஸஹீஹு ல் புகாரியின் விரிவுரை நூல்களைப் புரட்டியபோது சுவையான இந்த உரையாடலின் முன் - பின் நிகழ்வுகள் சங்கிலித் தொடர்போல் கிடைத்தன. வரலாற்றுச் சிறப்புமிக்க ஹு தைபிய்யா உடன்படிக்கையில் தொடங்கி ரோமாபுரியின் கண்ணியத்திற்குரிய போப்பாண்டவர் ளகாத்திர் இஸ்லாத்தில் இணைவது வரை அது நீளுகிறது! இவை ஆச்சரியமான நிகழ்வுகள் மட்டுமல்ல நபி (ஸல்) அவர்களின் தூதுத்துவத்திற்கு வலுமேல் வலுசேர்க்கும் வரலாற்றுச் சான்றுகளாகவும் திகழ்ந்து கொண்டிருக்கின்றன.

இவ்விஷயங்களைக் கட்டுரைத் தொடராக எழுவதை விட நாடகமாக வடிவமைத்தால் நன்றாக இருக் குமே., மக்கள் மனங்களில் என்றென்றும் நீங்காது நிலைத்திருக்குமே என்கிற எண்ணம் என் மனத்தில் உதிக்கவே நாடகம் தயாரானது.

இந்த நாடகத்தில் நபி (ஸல்) அவர்கள் நவின்றதாக உள்ள வாக்கியங்களைப் பொறுத்து நான் சொல்வது என்னவெனில், அரபி மொழிக்கே உரிய கருத்துச் செறிவின் அடிப்படையில் நாடகப் பாணிக்காக ஒருசில கூடுதல் வார்த்தைகள் மொழிபெயர்ப்பில் இடம்பெற்றிருக்கலாம். எனவே நபிமொழி வாசகங்களை - இந்த நாடக நூலில் இருந்து நேரடியாகப் பெறாமல் பிற மூலாதார நூல்களையும் பார்த்துக் கொள்ளுமாறு வாசகர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

இந்நூலாக்கப் பணியில் தக்க ஆலோசனைகள் வழங்கி ஒத்துழைப்பு நல்கிய அனைவருக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். அல்லாஹ் நம் அனைவரின் நற்பணிகளையும் ஏற்று நாளை மறு உலகில் நற்கூலி வழங்குவானாக!

23 - 2 - 2008 அன்புடன்

உனைஸா **K.J. மஸ்தான் அலீ பாகவி, உமரி**

**(அபூ காலித்)**

## காட்சி 1

## பங்கேற்போர்

**நபி (ஸல்) அவர்கள், பிஷ்ர் பின் சுப்யான், புதைல் பின் வர்க்கா, நபித்தோழர்கள், நபியவர்களின் ஒட்டகம் கஸ்வா,**

**(பின்னணிக் குரல்: இஸ்லாம் என்றாலே சாந்தி, சமாதானம் என்று பொருள். மனித சமுதாயத்தில் அமைதியை நிலைநாட்ட வேண்டும்., எல்லா மக்களும் நல்லிணக்கத்துடனும் மனித நேயத்துடனும் வாழ வேண்டும் என்பதே அதன் உன்னதமான இலட்சியமாகும்.**

**போரும் பூசலுமே அன்றாட வாழ்க்கை என்றாகிவிட்ட இன்றைய சோகம் நிறைந்த உலகில் அமைதி என்பது எட்டாக்கனிதான். ஆனால் இஸ்லாத்தின் வழிகாட்டலை முழுமையாகக் கடைப்பிடித் தால், அண்ணல் நபிகளாரின் அடிச்சுவட்டை அச்சுப் பிசகாமல் பின் பற்றினால் அமைதி என்பது முற்றத்தில் தவழும் முக்கனியே!**

**இதோ! இஸ்லாமிய வரலாற்றின் அலங்காரமாகத் திகழும் ஹு தைபிய்யா உடன்படிக்கை என்பது, அண்ணலார் மேற்கொண்ட அமைதிக்கான இலட்சியப் பயணத்தில் ஒரு மைல்கல் ஆகும்! போரிடும் உலகத்தை வேருடன் சாய்ப்பது எப்படி என்று இன்றளவும் உலகிற்கு உணர்த்திக் கொண்டிருக்கும் மாபெரும் வரலாற்றுப் பெட்டகம் ஆகும்!**

**அந்த அழகிய வரலாறு தரும் பாடங்கள்தான் காட்சிச் சித்திரமாக உங்கள் முன் சமர்ப்பிக்கப்படுகிறது ...)**

(அண்ணல் நபி(ஸல்)அவர்கள் மதீனா பள்ளிவாசலில் அமர்ந்து அன்புத் தோழர்களுடன் உரையாடிக் கொண்டிருக்கிறார்கள்)

**நபி (ஸல்) அவர்கள்:** என் அன்புத் தோழர்களே! நான் ஒரு கனவு கண்டேன். நாம் அனைவரும் மக்க மாநகர் சென்று கஃபா ஆலயத்தைத் தரிசிப்பது போன்றும் உம்றா செய்வது போன்றும் ஒரு கனவு எனக்குக் காண்பிக்கப்பட்டது.

இந்தக் கனவின் தாத்பரியம் என்னவென்றால், நாம் அனைவரும் மக்கமா நகர் சென்று உம்றா செய்ய வேண்டும் என அல்லாஹ் விரும்புகிறான் என்பதுதான்! எனவே நீங்கள் அனைத்து மக்களுக்கும் இது பற்றி பொதுஅறிவிப்புச் செய்யுங்கள். உம்றா பயணம் புறப்படுவதற்கு எல்லா ஏற்பாடுகளும் செய்யுங்கள்.

- நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறியதும் தோழர்களுக்கு மத்தியில் பெரும் மகிழ்ச்சி. மக்க மாநகர் சென்று உம்றா செய்யும் பெரும் பாக்கியம் கிடைப்பது குறித்து அனைவரும் அகமகிழ்கிறார்கள்.

- அண்ணல் நபி (ஸல்) அவர்களின் தலைமையில் சுமார் 1500 பேர் கொண்ட உம்றா பயணக்குழு தயாரானது. இஹ்றாம் தரிப்பதற்காக நிர்ணயிக்கப்பட்ட மீக்காத் எனும் எல்லையை அடைந்து எல்லோரும் குளித்து **இஹ்ராம்** எனும் இரண்டு வெள்ளாடைகளை அணிகிறார்கள். மக்க மாநகர் சென்று குர்பானி கொடுப்பதற்காக உடன் அழைத்துச் செல்லும் ஒட்டகங்களுக்கும் மாடுகளுக்கும் அடையாளம் இடுகிறார்கள். இவ்வாறாக உம்றா புனிதப் பயணம் ஒட்டகங்களிலும் பிற வாகனங்களிலும் மக்க மாநகர் நோக்கி பெரிய அளவில் புறப்பட்டது.

அபூ பக்ர், உமர், உஸ்மான், அலீ (ரலி - அன்ஹு ம்) போன்ற முக்கியமான தோழர்களும் உடன் செல்கிறார்கள்.

சற்று நேரத்தில் குதிரை மீது ஒருவர் வேகமாக வருகிறார். அதனைக் கவனித்த தோழர்களில் ஒருவர்:

இதோ! தூரத்தில் வருவது பிஷ்ர் பின் சுப்யான்தான்! நம்மை நோக்கித்தான் வருகிறார். ஏதோ ஒரு விஷேசமான செய்தியை அவர் கொண்டுவர வேண்டும். என்ன செய்தியைக்கொண்டு வருகிறாரோ தெரியவில்லையே.

(வந்தவர் குதிரையிலிருந்து இறங்கி நபியவர்களிடம் வந்து பதற்றத்துடன் சொல்கிறார்)

**பிஷ்ர் பின் சுப்யான்:** முஹம்மதே!! நீங்கள் திடீரென மக்கா நகரம் நோக்கி வந்துகொண்டிருக்கும் செய்தி அறிந்து மக்காவில் மக்கள் மத்தியில் பெரும் பரபரப்பு! எனவே நான் உங்களுக்குச் சொல்ல வந்தது என்ன என்றால், இப்பொழுது நீங்கள் தேர்ந் தெடுத்துள்ள இந்தப் பாதையை விட்டுவிட்டு வேறுபாதையில் செல்வீர்களானால் யாருக்கும் தெரியாமலேயே - எவ்விதச் சிரமமின்றியே மக்காவுக்குப் போய் சேர்ந்து விடலாம்.

- அதன்பிறகு நபியவர்கள் மலைக் குன்றுகள் வழியாகச் செல்லும் கரடு முரடான வேறு பாதையைத் தேர்ந்தெடுத்து மக்கா நோக்கி வருகிறார்கள்.

இப்படியாக... வந்துகொண்டிருக்கும்போது, ஓரிடத்தில் நபி(ஸல்) அவர்களின் ஒட்டகம் **கஸ்வா** திடீரெனத் தரையில் மண்டியிட்டு படுத் துக் கொள்கிறது., எழுந்து செல்ல மறுத்து விடுகிறது!

தோழர்கள் பலர் அந்த ஒட்டகத்தை எப்படியாவது எழுப்பிட வேண்டுமென பல வழிகளில் முயற்சி செய்கிறார்கள். அதட்டியும் மிரட்டியும் கைத்தடியால் குத்தியும் **கஸ்வா** ஒட்டகத்தைப் கிளப்பப் பார்க்கிறார்கள். ஆனால் அந்த ஒட்டகம் எழுந்து நடக்க மறுக்கிறது., என்ன காரணத்தாலோ தொடர்ந்து பிடிவாதம் பிடிக்கிறது!

**தோழர்கள்:** நபிகளாரின் ஒட்டகம் **கஸ்வா** பிடிவாதம் பிடிக்கிறது. **கஸ்வா** பிடிவாதம் பிடிக்கிறது!!

**நபி(ஸல்) அவர்கள்:** எனது ஒட்டகம் பிடிவாதம் பிடிக்கவில்லை. பிடிவாதம் பிடிப்பது அதன் குணமுமல்ல! அன்று யமன் நாட்டு ஆட்சியாளன் அப்ரஹா, மக்காவில் உள்ள புனிதமிகு கஃபா ஆலயத்தை இடித்துத் தகர்க்க வந்தபோது அவனது யானையைத் தடுத்த இறை வன்தான் இப்பொழுது இங்கு இந்த ஒட்டகத்தையும் தடுத்துவைத்துள்ளான்.

எனது உயிர் எவன் கைவசத்தில் உள்ளதோ அந்த இறைவன் மீது சத்தியமாக! குறைஷிகளுடன் சமாதானம் செய்துகொள்ளவே நான் விரும்புகிறேன். (போரைக் கைவிட்டு விட்டு) அல்லாஹ்வின் புனிதத் தலங்களைக் கண்ணியப்படுத்தும் வகையிலான அமைதியை -சமாதானத்தை குறைஷிகள் விரும்புகிறார்கள் என்றால் சீரான தொரு செயல் திட்டத்தை அவர்களுக்கு நான் நிச்சயம் வகுத்துக் கொடுப்பேன்.

- இவ்வாறு கூறிக்கொண்டு நபியவர்கள் தமது ஒட்டகத்தைத் அதட்டி எழுப்பினார்கள். உடனே அது குதித்தெழுகிறது.

ஒட்டகம் அமர்ந்திருந்த அந்தப் பகுதியிலேயே நபியவர்களும் முஸ்லிம்களும் தங்குகிறார்கள். அந்த இடம் தான் வரலாற்றுச் சிறப்பு மிக்க **ஹு தைபிய்யா** ஆகும்.

சற்று நேரத்தில் புதைல் பின் வர்க்கா என்பவர் குஸாஆ என்ற தனது கூட்டத்தார் சிலருடன் நபியவர்களிடம் வந்தார். (அந்தப் பகுதியில் வாழ்ந்த குலத்தார்களிடையே இந்தக் கூட்டத்தார் மட்டுமே நபிகளாருக்கு நலன் நாடுபவர்களாய் இருந்தார்கள்)

**புதைல் பின் வர்க்கா:** முஹம்மதே! குறைஷிகள் இந்தப் பகுதியின் இன்னோர் இடத்தில் பெருங்கூட்டமாக வந்து தங்கியிருக்கிறார்கள். உங்கள் அனைவரையும் மக்காவினுள் நுழைவதற்கு அனுமதிக்க மாட்டார்கள் என்றே தெரிகிறது. நீங்கள் மக்காவினுள் நுழைந்தால் உங்களுடன் போரிடத் தயாராக இருக்கிறார்கள்.

**நபி(ஸல்) அவர்கள்:** நாங்கள் எவருடனும் போரிட வரவில்லை. நாங்கள் மக்கா நகரை நாடி வருவதன் நோக்கம் அல்லாஹ்வின் புனிதமிகு கஃபா ஆலயத்தை தரிசிக்க வேண்டும்., உம்றா செய்ய வேண்டும் என்பதுதான்

குறைஷிகளுக்கு என்ன கேடு வந்தது? நாங்கள் எதற்காக வருகிறோம்? எங்கள் நோக்கம் என்ன? என்று தெரிந்துகொள்ளாமல் யுத்தம் யுத்தம் என்று குதிக்கிறார்களே, ஏன்? எங்களோடு வீணாக யுத்தம் செய்வது தான் அவர்களின் வேலையா? எத்தனை தடவை எங்கள் மீது அநியாயமாகப் போர் தொடுத்திருக்கிறார்கள்!

அப்படி போரிட்டுப் போரிட்டு இன்னும் அவர்களுக்குச் சலிப்புத் தட்டவில்லையா? எண்ணற்ற உயிர்ச்சேதங்களும் பொருட்சேதங்களும் ஏற்பட்ட பிறகும்கூட அவர்களுக்கு இன்னும் நல்ல புத்தி வரவில்லையா?

நான் குறைஷிகளுடன் சமாதானம் செய்துகொள்ளவே விரும்புகிறேன். அதற்கென சீரான ஒப்பந்தம் ஒன்றை வகுத்துக் கொடுப்பதற்கும் நான் தயார்.

ஆனால் ஒரு விஷயத்தை உறுதியாகச் சொல்கிறேன். இறைவன் அருளிய இந்த சத்திய மார்க்கத்தை - சீரான வழிகாட்டலை மக்களுக்கு மத்தியில் பிரச்சாரம் செய்ய எனக்கு முழுச்சுதந்திரம் வேண்டும். குறைஷிகள் அதற்கு இடையூறு செய்யக்கூடாது. எனக்கும் மக்களுக்கும் இடையே யாரும் தடையாக குறுக்கிடக் கூடாது.

இந்த இறையருள் மார்க்கத்தை எல்லோருக்கும் நான் எடுத்துச் சொல்வேன். அது இறைவன் எனக்கு இட்ட கட்டளை! அதை நிறைவேற்றியே தீருவேன்!

குறைஷிகளுக்கு உண்மையில் இறைவன் மீது அன்பு இருந்தால், ஏனைய மக்களைப்போல் அவர்களும் இந்த சத்திய நெறியில் இணைந்து கொள்ளலாம். இறைமார்க்கத்தை ஏற்றுக் கொள்ளலாம்.

**புதைல்:** நீங்கள் சொல்வதை குறைஷிகளுக்கு நான் எடுத்துக் கூறுவேன். (இவ்வாறு சொல்லிக்கொண்டு புதைல் புறப்பட்டார்)

(திரை விழுகிறது)

# காட்சி 2

# பங்கேற்போர்

**முஸ்லிம்கள் சார்பாக: நபி (ஸல்) அவர்கள், பிரபல நபித்தோழர் அலீ (ரலி) மற்றும் பிற தோழர்கள்.**

**எதிரணியில்: ஹு லைஸ் பின் அல்கமா, உர்வா பின் மஸ்ஊத், சுஹைல் பின் அம்ர் போன்ற தலைவர்கள் மற்றும் குறைஷி குலப் பிரமுகர்கள் பலர்.**

**(பின்னணிக் குரல்: சமாதான சக வாழ்வு மலர வேண்டுமானால் பொறுமையும் சகிப்புத்தன்மையும் மிகமிக அவசியம் என்பதற்கு நீங்கள் காணப்போகும் இந்நிகழ்ச்சி ஒரு படிப்பினை ஆகும்.**

**இதோ! குறைஷிகள் பேச்சுவார்த்தை நடத்த பலபேரை அனுப்பி வைக்கிறார்கள். இறுதியாக <u>ஸு ஹைல் பின் அம்ர்</u> வருகிறார். இவர் குறைஷி குலத் தலைவர்களில் ஒருவர்,. மிகப்பெரிய ராஜதந்திரி! சமாதானப் பேச்சு வார்த்தையில் குறைஷிகளுக்கு சாதகமான நிபந்தனைகளை ஸு ஹைல் முன்வைத்து வாதாடியபோது நபியவர்களும் தோழர்களும் அவற்றை எப்படி அணுகுகிறார்கள்? அமைதியை எப்படி வென்றெடுக்கிறார்கள்? என்பதை இந்தக் காட்சிகள் விளக்குகின்றன)**

**புதைல் பின் வர்க்கா:** குறைஷிகளே! கேட்டுக்கொள்ளுங்கள். முஹம்மதும் முஸ்லிம்களும் மக்க மாநகர் நோக்கி வருவது போர் செய்வதற்காக அல்ல. உம்றா செய்யும் எண்ணத்துடன்தான்! இதனை முஹம்மது உறுதிபடக் கூறுகிறார் ... எனவே ...

**குறைஷிகள்:** புதைலே! நிறுத்தும் உமது பேச்சை! நீர் சொல்வதை நம்ப முடியாது ... முஹம்மது யுத்தம் செய்ய வரவில்லை என்று வைத்துக் கொண்டாலும் இப்படி திடுமென மக்காவினுள் நுழைவதை அனுமதிக்க முடியாது. மக்கள் எங்களைப் பற்றி என்ன நினைப்பார்கள்? எங்களைக் கோழைகள் என்று கேவலமாகப் பேச மாட்டார்களா? எனவே முஹம்மதையும் அவருடைய தோழர்களையும் மக்காவினுள் நுழைவதற்கு அனுமதிக்கவே முடியாது!

**குறைஷிகள்:** (ஹு லைஸ் பின் அல்கமா என்பவரை நோக்கி) ஹு லைஸே! நீர் சென்று முஹம்மதை சந்தித்து உண்மை நிலையை அறிந்து கொண்டு வாரும்.

**நபி (ஸல்) அவர்கள்:** (ஹு லைஸ் என்பவர் வருவது தெறிந்ததும் தோழர்களிடம்) இவர் ஓர் பயபக்தியாளர், ஹஜ் - உம்றா காலங்களில் மக்காவில் பலியிடப்படும் பிராணிகளின் பேரில் அதிக பக்திகொண்ட கூட்டத்தைச் சேர்ந்தவர். எனவே நமது பலிப்பிராணிகள் அவர் கண்களில் படுகின்ற வகையில் அவற்றை முன்னால் ஓட்டிச் செல்லுங்கள்.

(தோழர்கள் குர்பானி ஒட்டகங்களை முன்னால் ஓட்டிச் செல்கிறார்கள். ஹு லைஸ் என்பரைக் கண்டதும் **லப்பைக் அல்லாஹு ம்ம லப்பைக் ..** எனும் தல்பியாவை முழங்கியவாறு அவரை வரவேற்கிறார்கள். ஹு லைஸ் அந்த குர்பானி ஒட்டகங்களைக் கண்டதும் - முஸ்லிம்களின் **தல்பியா** முழக்கத்தைக் கேட்டதும் கஃபா ஆலயத்தின் மீதான கண்ணியமும் பக்தியும் அவரை ஆட்கொள்கிறது. குர்பானிப் பிராணிகளின் கழுத்தில் அடையாளத்திற்காக மாட்டப்பட்ட இரும்பு வளையங்கள் உரசி உரசி காயம் ஏற்பட்டிருந்தது. அந்தப் பிராணிகள் பல நாட்களாகச் சந்தித்துக்கொண்டு வரும் துன்பத்தைக் கண்ட ஹு லைஸின் கண்கள் குளமாயின! அதனால் அவர், நபியவர்களைச் சந்திக்காமலேயே - எதுவும் பேசாமலேயே திரும்புகிறார். ஆனால் அவரையும் குறைஷிகள் நம்பவில்லை)

**குறைஷிகள்:** ஹு லைஸே! நீர் உட்காரும். நீர் நகர் புறத்தைச் சேர்ந்த மனிதர். உமக்கு ஒன்றும் தெரியாது. சும்மா பேசாமல் இரும்!

**ஹு லைஸ்:** (கோபத்துடன்) குறைஷிகளே! கஅபா ஆலயத்தைத் தரிசிக்கவும் உம்றா செய்யவும் வரக்கூடியவர்களைத் தடுத்து நிறுத்துவது சரியா? முறையா? நான் சொல்வதை நீங்கள் கேட்கவில்லை எனில் எனக்கும் உங்களுக்கும் எந்த ஒட்டுமில்லை. உறவும் இல்லை. முஹம்துக்கும் அவருடன் வந்தவர்களுக்கும் யாரும் எந்தத் தொல்லையும் கொடுக்கக் கூடாது. அப்படி ஏதாவது நடந்தால் எங்கள் கூட்டத்தினர் அனைவரையும் திரட்டிக்கொண்டு வந்து உங்களுடன் யுத்தம் செய்யவும் நான் தயங்க மாட்டேன்.

**குறைஷிகள்:** (அதிர்ச்சி அடைந்தவர்களாக) ஹு லைஸே! சற்று பொறுமையாக இரும். எது எங்களுக்கு நல்லது என்று தீர ஆலோசனை செய்து பொருத்தமானதொரு முடிவுக்கு வருவதற்கு எங்களை விடும். அவசரப்பட வேண்டாம்.

(பிறகு நபியவர்களிடம் பேச்சு வார்த்தை நடத்த உர்வா பின் மஸ்ஊத் என்பருக்கு குறைஷிகள அனுமதி அளிக்கிறார்கள். அவர் நபியவர்களிடம் வந்து ...)

**உர்வா பின் மஸ்ஊத்:** முஹம்மதே! பலதரப்பட்ட முகங்களை உடைய, பல்வேறு கூட்டங்களைச் சேர்ந்த விவரமில்லாத இந்த மனிதர்களை அழைத்துக்கொண்டு வந்துள்ளீர். இவர்களை கையில் வைத்துக் கொண்டு குறைஷிகளைக் கூண்டோடு அழித்துவிடலாம் என்று கருதுகிறீரா? உமது குலத்தைச் சேர்ந்த மக்களையே கொன்று குவித்து விடலாம் என்று கங்கணம் கட்டுகிறீரா?

ஆனால் அது ஒருபோதும் நடக்காது. குறைஷிகள் பெரும் படைகளைத் திரட்டிக்கொண்டு வந்துள்ளார்கள். பலமிக்க குதிரைகள் அவர்களிடம் ஏராளம் உள்ளன. நீங்கள் திடுமென மக்காவினுள் நுழைந்திட முடியாது.,அதற்கு உம்மை அனுமதிக்கப் போவதில்லை என்று குறைஷிகள் அல்லாஹ்வின் மீது ஆணையிட்டு உறுதிமொழி எடுத்துள்ளார்கள்! நீர் அழைத்து வந்திருப்பவர்களை நான் பார்க்கிறேன். ஆபத்து என்று வந்தால் உம்மை அம்போ என்று விட்டு விட்டு இவர்கள் ஓடிவிடுவார்கள்! பார்த்துக் கொள்ளும்!

(உர்வா இவ்வாறு கூறியதை அபூ பக்ர் உள்ளிட்ட பல தோழர்கள் கடுமையாக ஆட்சேபிக்கிறார்கள். எங்கள் உயிரினும் மேலாக நபியவர்களை நாங்கள் நேசிக்கிறோம். அவர்களைப் பாதுகாப்பதில் நாங்கள் எந்தக் குறையும் வைக்கமாட்டோம் என்று ஆவேசமாகக் கூறுகிறார்கள்)

**நபி (ஸல்)அவர்கள்:** (முன்பு சொன்னதுபோன்றே சொல்கிறார்கள்) நாங்கள் யாருடனும் யுத்தம் செய்ய வரவில்லை. உம்றா செய்து விட்டு அமைதியாகத் திரும்பி விடுவோம். இதையே மீண்டும் மீண்டும் நான் உறுதிபடக் கூறுகிறேன்.

(உர்வா பின் மஸ்ஊத், நபியவர்களுடன் பேச்சுவார்த்தை நடத்துவதற்காக அங்கு தங்கியிருந்த நேரங்களில் நபியவர்களுக்கு அன்புத் தோழர்கள் அளித்த கண்ணியத்தையும் -பாதுகாப்பையும் கண்டு வியக்கிறார். பிறகு குறைஷிகளிடம் திரும்பி வந்து கூறுகிறார்:)

**உர்வா:** குறைஷிகளே! நான் பல அரசர்களிடம் தூதுக் குழுவில் ஒருவனாகச் சென்றுள்ளேன். ரோம, பாரசீக மன்னர்களிடமும் அபீ சீனிய மன்னனிடமும் சென்றுள்ளேன். அல்லாஹ்வின் மீது ஆணையாக! முஹம்மதின் தோழர்கள் முஹம்மதுக்கு அளிக்கின்ற கண்ணியத்தைப்போல் எந்த அரசருக்கும் அவரது மக்கள் அளிப்பதை நான் பார்த்ததே இல்லை ...எனவே நேரிய திட்டம் ஒன்றை முஹம்மது உங்கள் முன்னால் சமர்ப்பிக்கிறார். எதுவும் பேசாமல் அதனை ஏற்றுக் கொள்ளுங்கள்!

(இதன் பிறகு நபி(ஸல்) அவர்களுடன் சமாதானம் பற்றி பேச்சு வார்த்தை நடத்த ஸு ஹைல் பின் அம்ர் என்பரைத் தேர்வு செய்கிறார்கள் குறைஷிகள்)

**குறைஷிகள்:** ஸு ஹைலே! நீர் சென்று முஹம்மதிடம் சமாதானம் பற்றி பேசும். ஆனால் ஒரு விஷயத்தை அவரிடம் எடுத்துரைக்க மறந்து விடக்கூடாது. அவரும் அவருடன் வந்துள்ள முஸ்லிம்களும் இந்த ஆண்டு உம்றா செய்யாமலே திரும்பிச் சென்றிட வேண்டும். வேண்டுமானால் அனைவரும் அடுத்த ஆண்டு வந்து உம்றா செய்து கொள்ளட்டும்.

ஏனெனில் முஹம்மது மக்காவினுள் திடீரெனப் புகுந்து, நிம்மதியாக உம்றா செய்துவிட்டுத் திரும்பி விட் டார்., அதைத் தடுத்து நிறுத்துவதற்குக்கூட குறைஷிகளுக்கு சக்தி இல்லை என்று அரபு மக்கள் பரிகாசம் செய்வார்கள். குறைஷிகள் கோழைகளாகி விட்டனர் என்று நம்மை இழிவாகவும் கேவலமாகவும் யாரும் பேசுவதற்கு நாம் இடமளித்து விடக் கூடாது. அப்படிப்பட்ட பழிச்சொல்லுக்கு நாம் ஆளாகிவிடக் கூடாது.

(குறைஷிகள் சொன்ன விஷயங்களைக் கவனமாகக் கேட்டுக் கொண்டு சமாதான உடன்படிக்கை பற்றி பேசுவதற்காக நபியவர் களின் இடத்தை நோக்கி ஸு ஹைல் புறப்படுகிறார்)

(திரை விழுகிறது)

## காட்சி 3

## பங்கேற்போர்

**நபி (ஸல்) அவர்கள், அலீ (ரலி) அவர்கள், ஸு ஹைல் மற்றும் பல தோழர்கள்.**

**(பின்னணிக் குரல்: திருக்குர்ஆன் இறைவன் அருளிய இறுதி வேதம்தான் என்பதற்கு குர்ஆனின் அற்புதத் தன்மையே சாட்சியாக இருக்கிறது. அது ஆரம்ப நாள் முதலே ஒரு சவாலை மனிதர்களின் முன் சமர்ப்பிக் கிறது. அதாவது, இந்த வேதம் இறைவன் இறக்கி அருளியதா? இல்லையா? என்பதில் உங்களுக்குச் சந்தேகம் இருந் தால் இதைப்போல் ஒரு வேதத்தை அல்லது ஓர் அத்தியாயத்தை அல்லது பத்து வசனங்களை, ஏன் ஒரேஒரு வசனத்தையேனும் கொண்டு வாருங்கள், பார்க்கலாம் எனும் அறைகூவல்தான் அது! இன்றும்கூட அந்தச் சவால் இறைநிராகரிப்பாளர்கள் முன்னிலையில் அப்படியேதான் இருக்கிறது! [*]**

**இதேபோன்று அந்த வேதத்தைச் சமர்ப்பித்த முஹம்மது நபி (ஸல்) அவர்களின் உம்மி நிலையும் (அதா வது எழுதவும் எழுதியதைப் படிக்கவும் தெரியாத நிலையும்) குர்ஆன் இறைவன் அருளிய வேதமே என்பதற்கான மற்றொரு சான்றாகத் திகழ்கிறது. ஹு தைபிய்யா உடன்படிக்கையின்போது நடைபெற்ற அது தொடர்பான ஒரு வரலாற் றுப்பூர்வ நிகழ்ச்சிதான், காட்சிச் சித்திரங்களாக இதோ! உங்கள் கண்கள் முன்னே ...)**

**நபி (ஸல்) அவர்கள்:** (தூரத்தில் ஸு ஹைல் வருவதைக் கண்டதும்) குறைஷிகள் நம்முடன் சமாதான உடன்படிக்கை செய்து கொள்ள விரும்புவதுபோல் தெரிகிறது! அதனால்தான் நம்மிடம் பேச்சுவார்த்தை நடத்துவதற்கு இப்போது இவரை (ஸு ஹைலை) தேர்ந்தெடுத்து அனுப்பி வைத்திருக்கிறார்கள். இனிமேல் காரியம் இலகவாக முடிந்துவிடும்!

**ஸு ஹைல்:** முஹம்மதே! குறைஷிகள் என்னிடம் சொல்லி அனுப்பிய சில முக்கியமான நிபந்தனைகளை மக்கத்து மக்கள் சார்பாக உங்கள் கவனத்திற்குக் கொண்டுவருகிறேன். அதாவது, மக்காவினுள் நுழை வதற்கோ உம்றா செய்வதற்கோ இப்பொழுது உங்களுக்கு அனுமதி கிடையாது. உம்றா செய்யாமலேயே மதீனாவுக்கு இப்பொழுது திரும்பிச்சென்றிட வேண்டும். அடுத்த ஆண்டு வந்து உம்றா செய்து கொள்ளலாம். இதனை ஒருமுக்கியமான நிபந் தனையாக குறைஷிகள் முன்வைக்கிறார்கள்.

இன்னொரு முக்கியமான விஷயம். அதாவது, இனிமேல் மக்காவில் இருந்து யாரேனும் உங்கள் மதத்தில்- இஸ்லாத்தில் சேர்த்து விட்டேன் என்று சொல்லிக்கொண்டு மதீனாவுக்கு வந்தால் அவர்களை நீங்கள் ஏற்றுக் கொள்ளக்கூடாது. அவர்களை முறையாக மக்காவுக்கே திருப்பி அனுப்பிட வேண்டும்.

ஆனால் மதீனாவில் இருந்து மக்காவுக்கு வருபவர்களை உங்களிடம் திருப்பி அனுப்ப வேண்டும் என்கிற கட்டாயம் எங்களுக்குக் கிடையாது. அப்படி வரும் நபர்களை குறைஷிகள் மதீனாவுக்குத் திருப்பி அனுப்ப மாட்டார்கள்.

(இவ்வாறு ஸு ஹைல் முன்வைத்த அனைத்தும் ஒருதலைப்பட்சமான நிபந்தனைகள்! அவை முஸ்லிம் களுக்குப் பாதகமாக இருந்தன. ஆனாலும் நபியவர்கள் அவற்றை ஏற்றுக்கொண்டு உடன்படிக்கைக்கு ஒப்புக் கொள்கிறார்கள். நபியவர்கள் அலீயை அழைத்து, ஒப்பந்தம் எழுதவதற்கு ஓர் ஏட்டினை எடுத்து வரச் சொல்கிறார்கள். பிறகு ஒப்பந்தத்திற்கான வாசகத்தைக் கூறுகிறார்கள்)

---

[*] **திருக்குர்ஆன் விடுக்கும் சவால் இதுதான்: (நபியே) கூறும்: மனிதர்கள் மற்றும் ஜின்கள் அனைவரும் ஒன்றுசேர்ந்து இந்தக் குர்ஆனைப் போன்ற ஒரு நூலைக் கொண்டுவர முயன்றாலும் இதைப் போன்ற நூலை அவர்களால் கொண்டு வர முடியாது. அவர்கள் ஒருவர் மற்றவருக்கு உதவியாளராக இருந்தாலும் சரியே! (அத்: 17 வசனம்: 88) மேலும் பார்க்க: வசனங்கள் (52 : 34) - (11 :13) - (2: 23) - 10 : 37, 38)**

**நபி (ஸல்) அவர்கள்:** அலீயே! நான் சொல்வதுபோல் எழுதும். முதலில், **பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்** (அளவிலாக் கருணையும் நிகரிலாக் கிருபையும் உடைய அல்லாஹ்வின் திருப்பெயரால்) என்று எழுதும்.
**ஸு ஹைல்:** இது என்ன புதிய பழக்கம்? புதுமையான வார்த்தைப் பிரயோகம்? ரஹ்மான் என்பது வித்தியாச மான ஒரு வார்த்தை! யாரும் பயன்படுத்தாத ஒன்று! அதற்கு என்ன அர்த்தம்? அது யாரைக் குறிக்கிறது என்பது பற்றி எங்களுக்கு எதுவும் தெரியாது.
நாம் எல்லோரும் இது நாள் வரையில் வழக்கமாக எழுதுவது போல் **பிஸ்மிக்கல்லாஹு ம்ம** (யா அல்லாஹ்! உனது திருப் பெயரால்..) என்றே எழுதுங்கள்.
**நபி (ஸல்) அவர்கள்:** ரஹ்மான் (கருணைமிக்க இறைவன்) எனும் சொல் அல்லாஹ்வின் திருப்பெயர்களில் ஒன்று! நீங்கள் அதை ஏற்றுக்கொள்ளவில்லை என்றால் பரவாயில்லை!
(அலீயை நோக்கி) அலீயே! இவர் சொல்வதுபோல் **பிஸ்மிக்கல்லா ஹு ம்ம** (யா அல்லாஹ்! உனது திருப் பெயரால்) என்றே எழுதும்.
**நபி (ஸல்) அவர்கள்:** எழுதி விட்டீரா? அடுத்து எழுதும்: **இது அல்லாஹ்வின் தூதர் முஹம்மது, குறைஷித் தலைவர்களுடன் செய்து கொண்ட ஒப்பந்தம் ...**
**ஸு ஹைல்:** இப்படி எழுதுவதும் கூடாது. நீங்கள் அல்லாஹ்வின் தூதர் என்பதை நாங்கள் ஏற்றிருந்தால் உங்களை உம்றா செய்ய விடாமல் தடுத்திருக்க மாட்டோமே! உங்களை எதிர்த்துப் போர் செய்திருக்க மாட்டோமே! எனவே உங்கள் பெயரையும் உங்கள் தந்தை பெயரையும் எழுதுங்கள்! அதாவது அப்துல்லாஹ் வின் மகனார் முஹம்மது செய்து கொண்ட ஒப்பந்தம் என்று எழுதுங்கள்.
**நபி (ஸல்) அவர்கள்:** அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நான் பொய் சொல்வதாக நீங்கள் கருதினாலும் நிச்சயமாக நான் அல்லாஹ்வின் தூதர்தான். சரி, பரவாயில்லை!.. (அலீயை நோக்கி) அலீயே! இவர் ஆட்சேபனை செய்யும் இந்த வாசகத்தையும் ... **அல்லாஹ்வின் தூதர்** எனும் வாசகத்தையும் அழித்து விடும்.
**அலீ:** (மிகவும் ஆவேசமாக) நீங்கள் அல்லாஹ்வின் தூதர் என்பதுதான் உண்மை! உண்மைக்கு இவ்வுலகில் என்றைக்கும் அழிவில்லை! ... அல்லாஹ்வின் தூதரே! எனது தாயும் தந்தையும் உங்களுக்கு அர்ப்பணமாகட் டும்! **லா இலாஹ இல்லல்லாஹ் முஹம்மதுர் ரஸூ லுல் லாஹ்** என்கிற இந்த சத்தியத் திருவாசகத்தை இவ்வலகில் நிலை நாட்டவே நான் எனது வாழ்க்கை முழுவதையும் அர்ப்பணித்திருக்கிறேன்! இது உங்க ளுக்கும் தெரியும்தானே! எனவே **முஹம்மது ரஸூ லுல்லாஹ்** (நீங்கள் அல்லாஹ்வின் தூதர்) என்று நானே எழுதிய இந்த உண்மை வாசகத்தை நான் ஒருபோதும் அழிக்க மாட்டேன்.
**நபி (ஸல்) அவர்கள்:** (எழுதுகோலை தமது கையில் வாங்கிக் கொண்டு) சரி, நானே அதனை அழிக்கிறேன். அந்த வாசகம் எங்கே என்பதை மட்டும் எனக்குக் காண்பியுங்கள்.
- அந்த வாசகத்தை அலீ (ரலி) அவர்கள் நபியவர்களுக்குக் காண்பிக்கவே நபியவர்கள் அதனை அழிக்கி றார்கள்)
(**பின்னணிக் குரல்:** இதோ! நபி(ஸல்) அவர்கள், அழிக்க வேண்டிய அந்த வாசகம் எங்கே என்று கேட்டுத் தான் அழிக்கிறார்கள். ஹு தைபிய்யா உடன்படிக்கையின்போது நடைபெற்ற இந்த முக்கிய மான நிகழ்ச்சி, வானுலகத்திலிருந்து நபி (ஸல்) அவர்களுக்கு வஹி எனும் இறையருட்செய்தி வருவது உண்மையே என்பதற் கும் மனித குலத்திற்கு அவர்கள் வழங்கிய திருக்குர்ஆன் இறைவன் அருளிய திருவேதமே என்தற்கும் அழியாச் சான்றாகத் திகழ்ந்து கொண்டிருக்கிறது)

(திரை விழுகிறது)

## காட்சி 4

## பங்கேற்போர்

**நபி (ஸல்)அவர்கள், அபூ ஜந்தல், தோழர்கள் பலர், சுஹைல் பின் அம்ர்**

**(பின்னணிக் குரல்: முஸ்லிம்களைக் கடுமையாகப் பகைத்துக் கொண்டிருந்த மக்கத்து குறைஷிகளுடன் எப்படியாவது ஓர் அமைதி உடன்படிக்கை காண வேண்டும்., மக்கள் மத்தியில் அமைதியும் நல்லி ணக்கமும் நிலவிட வேண்டுமென்பதுதான் நபிகளாரின் இலட்சியமாக இருந்தது. அது நிறைவேறுவதற்கு அவர்களின் அன்புத் தோழர்கள் பெரிதும் ஒத்துழைப்பு நல்கினார்கள். ஆம்!, முஸ்லிம்களுக்குப் பாதகமான நிபந்தனைகளை குறைஷிகள் முன் வைத்து விடாப்பிடியாக வாதாடியபோது, சில நலன்களை முன்னிட்டு நபி (ஸல்) அவர்கள் அவற்றை ஏற்றுக்கொண்டபோது தோழர்கள் காட்டிய பொறுமையும் கட்டுப்பாடும் மிகவும் பாராட்டுக்குரியவை! நாம் அனைவரும் என்றென் றும் நினைவில் நிறுத்திச் செயல்படத்தக்க பாடங்களுமாகும். அந்தக் காட்சிகள் தான் இதோ! உங்கள் பார்வையில் ...)**

**ஸு ஹைல்:** முஹம்மதே! குறைஷிகள் வலியுறுத்தும் முக்கியமான தொரு நிபந்தனையை உங்களுக்கு மீண்டும் நினைவூட்டுகிறேன். அதாவது, எங்களிடம் இருந்து யாரேனும் உங்களிடம் வந்தால் - அவர் உங்கள்

மதத்தை ஏற்றிருந்தாலும் சரி, அவரை எங்களிடமே திருப்பி அனுப்பிட வேண்டும் என்று சொன்னேன் அல்லவா? இந்த நிபந்தனையை ஒப்பந்தத்தில் கண்டிப்பாகச் சேர்த்தாக வேண்டும். அப்படிச் சேர்த்தால்தான் உடன்படிக்கைக்கு குறைஷிகள் ஒப்புக் கொள்வார்கள். இல்லையெனில் உடன்படிக்கையை ஒருபோதும் அவர்கள் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள் ...

(முஸ்லிம்களுக்கு மிகவும் பாதகமான இந்த நிபந்தனையை ஒப்பந்தத்தில் சேர்க்க வேண்டும்என ஸு ஹைல் வற்புறுத்த- முஸ்லிம்கள் அதைக் கடுமையாக ஆட்சேபித்துக் கொண்டிருந்த நேரத்தில்...

அபூ ஜந்தல் எனும் முஸ்லிம் கை கால்களில் விலங்கிடப்பட்டு தத்தித் தத்தி நடந்து வருகிறார். அவரைக் கண்டதும் சமாதானம் பற்றிய பேச்சுவார்த்தையில் ஈடுபட்டிருந்த ஸு ஹைல் எழுந்து சென்று அவரது முகத் தில் ஓங்கி ஓங்கி அறைகிறார் ... )

**ஸு ஹைல்:** (அபூ ஜந்தலை நோக்கி) கை கால்களில் விலங்குகள் மாட்டி வீட்டில் தனி இடத்தில் போட்டு அடைத்துப் விட்டுத்தானே வந்தேன்., அதற்குள் அங்கிருந்து தப்பி இங்கு வந்து விட்டாயா? நாங்கள் வணங்குகிற சாமிச்சிலைகளை நீ வணங்காதிருப்பதற்கு என்ன கேடு வந்தது, உனக்கு? ... நம் மூதாதை யரின் மதத்தை நீயே இழிவுபடுத்தினால் - நம் மூதாதையர் காலங்காலமாகக் கொண்டாடி வருகின்ற கடவுளர் களை நீயே இழிவாகப் பேசினால் மக்கள் மத்தியில் எனக்குள்ள செல்வாக்கு என்னாவது? என்னைப் பற்றி மக்கள் என்ன நினைப்பார்கள்? ...

**ஸு ஹைல்:** (நபியவர்களை நோக்கி சற்று உரத்த குரலில்) முஹம்மதே! இதோ! எனது மகன் அபூ ஜந்தல்! இவரது கால் களில் விலங்குகள் பூட்டி வீட்டில் கட்டிப்போட்டிருந்தேன். எனது மகனேகூட எங்களை ஏமாற்றி எனது வீட்டில் இருந்து தப்பித்து இங்கு வந்து விட்டார்! எனவே ஒப்பந்தப்படி முதலில் எனது மகன் அபூ ஜந்தலை எங்களிடம் ஒப்படைக்குமாறு கேட்டுக்கொள்கிறேன். இவரைப் போன்று இனி யார் யார் மக்காவில் இருந்து இங்கு வந்தாலும் அவர்களையும் நீங்கள் மதீனாவில் வைத்திருக்கக் கூடாது., மக்காவுக்கே திருப்பி அனுப்பிட வேண்டும். இந்த நிபந்தனை உடன்படிக்கையில் ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது!!

**நபி (ஸல்) அவர்கள்:** ஆனால் ... நாம்தான் இன்னும் இந்த நிபந்தனையை எழுதி முடிக்கவில்லையே ...!

**ஸு ஹைல்:** இவரை எங்களிடம் நீங்கள் ஒப்படைக்க மறுத்தால்,அல்லாஹ்வின் மீது ஆணையாக! உங்களிடம் எந்த அடிப்படை யிலும் நாங்கள் சமாதானம் செய்து கொள்ள முடியாது.

**நபி (ஸல்) அவர்கள்:** அப்படியென்றால் இவரை மட்டுமாவது நான் திருப்பி அனுப்பாமல் இருக்க அனுமதி தாருங்கள் ...

**ஸு ஹைல்:** நான் உங்களுக்கு அனுமதி தரமாட்டேன்.

(தனது மகன் அபூஜந்தல் இஸ்லாத்தில் இணைந்ததைச் சகிக்க முடியாமல் அவரது கால்களில் விலங்கிட்டு வீட்டில் கட்டிப் போட்டி ருந்தார் ஸு ஹைல். ஆனால் அபூ ஜந்தல் மிகவும் சாதுர்யமாக அங்கிருந்து தப்பித்து திரு மதீனாவுக்கு வந்து சேர்ந்த நேரத்தில்தான் ... தனது தந்தையிடமே வசமாக மாட்டிக்கொள்கிறார்! அவரை நிர்பந்தமாக இழுத்துச் செல்கிறார் ஸு ஹைல். மக்காவுக்கே திருப்பி அனுப்புவதற்காக அத்திசை நோக்கி அவரைத் தள்ளிவிடுகிறார்!

**அபூ ஜந்தல்:** (கதறி அழுது அரற்றியவாறு முஸ்லிம்களை நோக்கி)
முஸ்லிம்களே! எதிரிகள் எனது கை கால்களில் விலங்குகள் மாட்டி வீட்டில் அடைத்து வைத்திருந்தார்கள்., நான் எவ்வளவு கஷ்டப்பட்டு அங்கிருந்து தப்பிப் பிழைத்து உங்களிடம் வந்திருக்கிறேன் தெரியுமா? நீங்கள் என்னை மீண்டும் அந்த எதிரிகளிடமே திருப்பி அனுப்புகிறீர்களா? நான் சந்தித்த சிரமங்களை நீங்கள் சிந்தித்துப் பார்க்க மாட்டீர்களா?

**நபி (ஸல்) அவர்கள்:** அபூ ஜந்தலே! பொறுமையை மேற்கொள்ளும். அதற்கான கூலியை அல்லாஹ்விடம் எதிர்பாரும். அல்லாஹ் உமக்கு நிச்சயம் நற்கூலி தருவான். இப்பொழுது நாங்கள் ஓர் ஒப்பந்தத்தை மேற் கொள்ள வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறோம்.

(முஸ்லிம்கள், உணர்வுகள் காயப்படுத்தப்பட்ட நிலையில் கடும் சினத்தையும் மன வேதனையையும் தாங்கிச் சகித்துக்கொண்டு அபூ ஜந்தலை பரிதாபமாகப் பார்த்த வண்ணம் மௌனமாக இருக்கி றார்கள்)

(திரை விழுகிறது)

## காட்சி 5

### பங்கு பெற்றோர்

**நபி (ஸல்) அவர்கள், திஹ்யா பின் கலீஃபத்துல் கல்பீ, மற்றும் பல தோழர்கள்.**

**(பின்னணிக் குரல்: பல சுற்றுப் பேச்சுவார்த்தைக்குப் பிறகு முஹம்மத் நபி(ஸல்) அவர்களுக்கும் மக்கத்து குறைஷிகளுகுக்கும் மத்தியில் ஓர் அமைதி உடன்படிக்கை கையெழுத்தானது. இனி 10 ஆண்டுகளுக்கு போர் நிறுத்தம் செய்வதென முடிவானது. இதேபோல் முஹம்மது நபியும் முஸ்லிம்களும் இப்போது உம்றா செய்யாமல்**

**மதீனா திரும்பிட வேண்டும்., அடுத்த ஆண்டு வந்து உம்றா செய்து கொள்ளலாம்., அப்படி வரும்போது மூன்று நாட்கள் மட்டுமே மக்காவில் தங்கியிருக்க வேண்டும் என்றும் ஒப்புக் கொள்ளப்பட்டது.**

**நபி (ஸல்)அவர்களும் தோழர்களும் அங்கேயே தலைமுடி மழித் தார்கள். பிராணிகளை அறுத்து குர்பானி கொடுத்து உம்றாப் பயணத்தை முடித்துக் கொண்டு மதீனா திரும்பினார்கள்.**

**திரும்பி வரும் வழியிலேயே - (நபியே) நிச்சயமாக நாம் உமக்கு வெளிப்படையான வெற்றியை அளித்தி ருக்கிறோம் என்று தொடங்கும் குர்ஆனின் 48 ஆம் அத்தியாயம் அல்ஃபத்ஹ் இறக்கியருளப்பட்டது. உடனே நபி (ஸல்) அவர்கள், உமர் அவர்களை அழைத்து அதை ஓதிக் காட்டினார்கள். இப்படி உரிமைகளை எல்லாம் விட்டுக்கொடுத்து இந்த உடன்படிக்கையை மேற்கொள்ள வேண்டிய அவசியம் என்ன என்று ஆட்சேபனை செய்தவர்களில் உமர் (ரலி) அவர்கள்தான் முன்ன ணியில் இருந்தார்கள்.**

**ஹு தைபிய்யா உடன்படிக்கைதான் நபியவர்களின் வரலாற்றில் மகத்தான வெற்றிக்கு அடிகோலியது. ஆம்! இந்த உடன்படிக்கையின் பயனாகச் சமூகத்தில் அமைதியும் நல்லிணக்கமும் நிலவியது. மக்கள் நிம்மதிக் காற்றைச் சுவாசித்தார்கள். அதை முன்னிட்டு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இஸ்லாத்தின் அழைப்புப் பணிக்குப் புதுவடிவம் கொடுத்தார்கள்! அதுவும் தனது புதுப் பயணத்தைத் தொடங்கியது!**

**அழைப்பீராக என்பது இறைவனின் கட்டளை!<br>அழைப்பு விடுப்பது இறைத்தூதரின் கடமை!<br>அழைப்புப் பணியே இஸ்லாத்தின் உயிர்மை<br>இஸ்லாத்தை -<br>ஏற்பதும் எற்காதிருப்பதும் அவரவர் உரிமை!**

**இதுவரையில்<br>வீட்டுக்குள்ளேயே விடுக்கப்பட்டு வந்த<br>இஸ்லாத்தின் அழைப்பு - இப்பொழுது<br>வெளி உலகைத் தேடி வருகிறது!**

**இதோ! எழுதுகோலின் உதவியால்<br>எழுத்தின் வலிமையால்<br>எட்டுக் குதிரை வேகத்தை - அது<br>எட்டிப்பிடிக்கிறது!**

**ஆம், அண்ணல் நபி (ஸல்) அவர்கள்<br>சத்திய இஸ்லாத்தை ஏற்குமாறு அழைத்து<br>மடல்கள் வரையச் செய்து - அவற்றை<br>அண்டை நாடுகளின் ஆட்சியாளர்களுக்கு<br>அனுப்பி வைக்கிறார்கள்.<br>அன்புத் தோழர்கள் அவற்றைப் பெற்றுக்கொண்டு<br>புரவிகள் மீதமர்ந்து<br>பறந்து செல்கிறார்கள்,<br>எட்டுத் திக்குகளையும் நோக்கி...)**

**இஸ்லாத்தின் எழுச்சிமிகு வரலாற்றில் பெரும் திருப்புமுனையாக அமைந்த அந்த நிகழ்ச்சிகள்தான் எவ்விதக் கூடுதல் குறைவுமின்றி காட்சிச் சித்திரங்களாக இதோ! உங்கள் கண்கள் முன்னே ...)**

**நபி(ஸல்) அவர்கள்:** (எழுத்தர்களை அழைத்து) நான் சொல்வது போல் தனித்தனியாக மடல்கள் எழுதுங்கள். அல்லாஹ்வின் மார்க் கத்தின் பக்கம் ஆட்சியாளர்களையும் அழைக்க வேண்டும். அவர் களின் மூலம் அந்தந்த பகுதிகளில் வாழும் பொதுமக்களிடமும் இஸ்லாத்தின் தூதுச்செய்தி சென்றடைந்திட வேண்டும்.

(**இஸ்லாத்தை ஏற்று இறைநெறியில் வாழ்வீர்., ஈடேற்றம் பெறுவீர்** எனும் முத்திரை வாசகங்களுடன் மடல்கள் எழுதப்படுகின்றன)

**நபி (ஸல்) அவர்கள்:** (அம்ரு பின் உமய்யா - அள்ளம்ரி எனும் தோழரை அழைத்து ஓர்மடலை ஒப்படைத்து சொன்னார்கள்) இதனை எத்தியோப்பியா சென்று நஜாஷி மன்னரிடம் ஒப்படைத்து விட்டுவாரும்.

(அலாஉ பின் ஹள்ரமீ எனும் தோழரை அழைத்து ஓர் மடலை ஒப்படைத்து) இதனை **பஹ்ரைன் மன்னர் முன்திர் பின் ஸாவா** வசம் ஒப்டைத்து விட்டு வாரும்.

(அப்துல்லாஹ் பின் ஹு தாபா ஸஹ்மீ எனும் தோழரை அழைத்து ஓர் மடலை ஒப்படைத்து) இதனை பாரசீக மன்னன் **குஸ்ருபர்வேஸ்** வசம் ஒப்படைத்து விட்டு வாரும்.

(ஹாத்தப் பின் அபூ பல்த்தஆ எனும் தோழரை அழைத்து ஓர் மடலை ஒப்படைத்து) இதனை எகிப்து மன்னன் **முகவ்கிஸ் ஜு ரைஜ் பின் மத்தா** வசம் ஒப்படைத்து விட்டு வாரும்.

(அம்ர் பின் ஆஸ் எனும் தோழரை அழைத்து) இதனை ஏமன் மன்னர் **ஜீஃபர் மற்றும் அவரது சதோதரர் அப்து** ஆகியோர் வசம் ஒப்படைத்து விட்டு வாரும்.

(ஷு ஜாஉ பின் வஹ்ப் எனும் தோழரை அழைத்து)இந்த மடலை திமஷ்க் ஆட்சியாளர் **ஹாரிஸ் பின் அபீ ஷம்ர்** வசம் ஒப்படைத்து விட்டு வாரும்.

(ஸு லைத் பின் அம்ர் எனும் தோழரை அழைத்து)இதனை யமாமா வின் ஆளுநர் **ஹௌத்தா பின் அலீ** வசம் ஒப்படைத்து விட்டு வாரும். ஒவ்வொரு தோழரும் புரவியின் மீதமர்ந்து அண்ணலார் சுட்டிக்காட்டிய திக்கு நோக்கி பறந்து செல்கிறார்கள்.

**(இதேபோல் திஹ்யா பின் கலீஃபத்துல் கல்பி எனும் தோழரை அழைத்து கூறுகிறார்கள்:)** திஹ்யாவே! இந்த மடல் ரோமாபுரியின் மன்னர் **ஹெர்குலிஸு க்கு** எழுதப்பட்டது. இதனை புஸ்ரா* மாகா ணத்தின் குறுநில மன்னரிடம் கொடும். இதனை ஹெர்குலிஸ் மன்னரிடம் சேர்ப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்யுமாறு அவரிடம் சொல்லும்.

**திஹ்யா :** அல்லாஹ்வின் தூதரே! அவ்வாறே செய்கிறேன்.

திஹ்யா பின் கலீஃபத்துல் கல்பி (ரலி) அவர்கள், நபி (ஸல்) அவர்களின் அழைப்பு மடலை எடுத்துக்கொண்டு ரோமாபுரி நோக்கி குதிரை மீது வேகமாக விரைகிறார்!

(திரை விழுகிறது)

# காட்சி 6

## பங்குபெறுவோர்

**ரோமப் பேரரசர் ஹெர்குலிஸ். அவருடைய மந்திரிகள், அரசவைப் பிரதானிகள்.**

**(பின்னணிக் குரல்: முஹம்மது நபியின் வருகையை உண்மைப் படுத்தக்கூடிய வகையில் முந்தைய வேதங் களில் பல முன்னறிவிப்புகள் உண்டு. ஆனாலும் யூத, கிறிஸ்தவ மத அறிஞர்கள் மனமாச்சரியத் தால் வரலாறு நெடுகிலும் அவற்றை மறைத்தே வந்துள்ளனர். ஆனால் அந்த முன்னறிவிப்புகளின் உண்மை நிலையை தாமும் ஏற்றுக்கொண்டு உலகிற்கு எடுத்துரைப்பதற்கு ... இதோ! ரோமப் பேரரசர் ஹெர்குலிஸ் வருகிறார்!**

**...ஷாம் தேசத்துப் பகுதிகளில் ஈரானிய குறுநில மன்னர்களுடன் நடைபெற்ற போரில் ஹெர்குலிஸ் மன்னர் வெற்றிவாகை சூடினார். முன்பு நடந்த போர்களில் எதிரிகளின் கைகளில் சிக்கிய பிரமாண்டமான சிலுவையும் அந்தப் போரில்தான் மீட்கப்பட்டது. அதுவே, இயேசு நாதரை அறைந்து கொலை செய்த அசல் சிலுவை என்பது அந்த ரோமானியர்களின் மத நம்பிக்கை!**

**அந்த வெற்றியை முன்னிட்டு பைத்துல் முகத்தஸ் ஆலயத்தில் தொழுது இறைவனுக்கு நன்றி செலுத்த நடந்தே வருவதாக நேர்ச்சை செய்திருந்தார் மன்னர்!. அதன்படி பாலஸ்தீனம் வந்த ஹெர்குலிஸ், தனது நண்பர் இப்னு நாத்தூர் என்ற ஷாம் தேசத்து பாதிரியிடம் விருந்தினராகத் தங்கியிருந்தார். அப்பொழுது நிகழ்ந்த சில விநோதமான நிகழ்ச்சிகள் ...! அவை என்ன?)**

மன்னர் ஹெர்குலிஸ் ஒருநாள் தர்பாருக்கு வருகை தருகிறார். மந்திரிகளும் அரசவைப் பிரமுகர்கள் அனை வரும் எழுந்து நின்று - ரோமப் பேரரசர் வாழ்க! மகா சக்கரவர்த்தி வாழ்க! மாமன்னர் ஹெர்குலிஸ் வாழ்க! வாழ்க!! என்று மன்னரை வாழ்த்துகிறார்கள். மகிழ்ச்சி பொங்க வரவேற்கிறார்கள்.

ஆனால் மாமன்னரின் முகத்தில் பெரும் கலவை ரேகை! எவ்வித மகிழ்ச்சியும் இல்லாமல் மனச்சோர்வுடன் காணப்படுகிறார் ...முகத்தை ம்ம் என்று வைத்துக்கொண்டு சிம்மாசனத்தில் அமர்கிறார். அதனைக் கண்ட அரசவைப் பிரதானிகள் மத்தியில் பதற்றம்! இன்று மன்னர் ஏன் கவலையுடன் இருக்கிறார்? அதற்கான காரணம் என்ன? அவரை மகிழ்விப்பது எப்படி? இது விஷயமாவே எல்லோரும் பேசுகிறார்கள்.

அமைச்சர்களும் மற்றவர்களும் பதற்றம் அடைகிறார்கள். அது பற்றி காதோடு ரகசியமாக பேசிக்கொள்கி றார்கள். ரோம சக்கர வர்த்தியின் கவலைக்கு என்ன காரணம் என்று யாருக்கும் புரியவில்லை. அதனால் தர்பாரில் எங்கு நோக்கினும் ஒரே பரபரப்பு!

**பிரதானிகளில் சிலர்:** (அமைதிச் சூழலைக் கலைத்தவாறு ரோமப் பேரரசருடன் பேசத் தொடங்கினார்கள்)

“சர்வ வல்லமை பொருந்திய மகா சக்கரவர்த்தியே, இன்று தாங்கள் கலவையுடன் இருப்பதேன்? தாங்கள் கவலை தோய்ந்த முகத்துடன் இருந்தால் நாங்கள் எப்படி சந்தோசமாக இருக்க முடியும்? தங்களது

---

* **புஸ்ரா : மதீனாவுக்கும் திமஷ்குக்கும் மத்தியில் உள்ள ஒரு பெரிய மாகாணம்.**

கவலைக்கு என்ன காரணம் என்பதை... தயைகூர்ந்து எங்களிடம் தெரியப்படுத்துங்கள். அதற்கான பரிகாரத்தை நாங்கள் கவனிக்கிறோம். அதற்காக வீணாக நீங்கள் கவலைப்பட வேண்டிய அவசியம் இல்லை!

**மன்னர்:**"நான் நேற்று இரவு வழக்கம்போல் வானத்தை உற்று நோக்கி நட்சத்திர மண்டலத்தை ஆராய்ந்து காலத்தின் நிலைமாற்றங்களைக் கணித்துக் கொண்டிருந்தேன். அப்போது ஒருசம்பவம் நிகழ்ந்திருப்பது எனக்குத் தெளிவாகப் புலப்பட்டது. அது மிகவும் திடுக்கிடும்படியானது. அந்த விஷயம்தான் சதாவும் எனது உள்ளத்தை வதைத்துக் கொண்டிருக்கிறது! வாட்டிக் கொண்டிருக்கிறது!

**அரசவைப் பிரதானிகள்:** பரபரப்புடன் - "சக்கரவர்த்தியே! என்ன அது? எங்களிடம் சொல்லுங்கள் என்று பணிந்து கேட்கிறார்கள்.

**மன்னர் தொடர்ந்தார்:** "விருத்த சேதனம் செய்துகொள்ளும் பழக்கம் உடைய சமுதாயத்திலிருந்து ஒருமன்னர் தோன்றி விட்டதாகத் தெரியவருகிறது. அதைப்பற்றிதான் சிந்தித்துக்கொண்டிருக்கிறேன். அவர் மூலமாக நமது ஆட்சிக்கு ஏதேனும் ஆபத்து வந்துவிடுமோ என்று ஒரே குழப்பமாக இருக்கிறது! பெரும் கவலையாக இருக்கிறது! என்ன செய்வது என்று ஒன்றுமே புலப்படவில்லை. விருத்த சேதனம் செய்யும் பழக்கம் உடைய மக்கள் யார் என்று உங்களுக்குத் தெரியுமா?

**மந்திரிகளில் ஒருவர்:** சக்கரவர்த்தியே! இதற்காக ஏன் வீணாகக் கவலைப்படுகிறீர்கள்? இது ஒரு பெரிய விஷயமல்லவே. இந்த யூத இன மக்கள்தான் விருத்தசேதனம் செய்கிறார்கள். வேறு எந்த இனத்தவரிடமும் அப்படிப்பட்ட பழக்கம் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. எனவே இந்த யூத இனத்தவர்களைக் கொன்று விட்டால் - அவர்கள் எல்லோரையும் தீர்த்துக்கட்டி விட்டால் அத்துடன் பிரச்சினை முடிந்து விடும்! மன்னர் பெருமானே! இந்தச் சின்ன விஷயத்திற்காக தாங்கள் வீணாக மனதை அலட்டிக்கொள்ளத் தேவை இல்லை!

**மற்றொருவர்:** "மகா சக்கரவர்த்தியே! இவர் கூறுவதுபோல் செய்வதுதான் சரி! தாங்கள் ஆட்சிக்கு உட்பட்ட நகரங்களுக்கு அதிகாரிகளை அனுப்பி ஆங்காங்கு உள்ள யூதர்கள் அவைரையும் கொன்றுவிடும்படி கட்டளையிடுங்கள். அப்படி எல்லா யூதர்களையும் கொன்று குவித்துவிடலாம். பிறகு தாங்களுக்கோ தாங்கள் ஆட் சிக்கோ எந்த ஆபத்தும் வராது!

**மன்னர்:** அப்படிப்பட்ட பழக்கம் உடையபுதிய சமுதாய மக்களைப் பற்றியே நான் சிந்தித்துக்கொண்டிருக்கி றேன். பழைய சமுதாயத்து மக்களாகிய யூதர்களைப் பற்றி எனக்கு எந்த அச்சமுமில்லை கவலையும் இல்லை!

(திரை விழுகிறது)

## காட்சி 7

### பங்குபெருவோர்

**திஹ்யா கல்பீ, அதீ பின் ஹாத்தம், புஸ்றா மாகாண குறுநில மன்னன்.**

**(பின்னணிக் குரல்: நபி (ஸல்) அவர்களின் அழைப்பு மடலை எடுத்துக்கொண்டு புறப்பட்ட தோழர் திஹ்யா கல்பி, புஸ்றா மாகா ணம் வந்து சேருகிறார்., அங்கு ஆட்சி செய்துகொண்டிருந்த குறு நில மன்னரின் அரண் மனையைத் தேடிக்கண்டு பிடித்து அரச தர்பாரினுள் நுழைகிறார் ... இதோ! அங்கு நடைபெற்ற காட்சிகள்! )**

**திஹ்யா கல்பி:** மன்னர் அவர்களே! இதோ! மக்க மாநகரில் தோன்றியுள்ள இறைத்தூதர் முஹம்மத் (ஸல்) அவர்கள் அனுப்பியுள்ள மடல். இது ரோமப்பேரரசர் ஹெர்குலிஸு க்காக எழுதப்பட்டதாகும். எனவே இந்த மடல் அவரிடம் போய் சேருவதற்கான முறையான ஏற்பாடுகளைச் செய்யுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

**மன்னர்:** ரொம்ப நன்றி. ரோமப் பேரரசர் இப்பொழுது பைத்துல் முகத்தஸ் ஆலயத்தைத் தரிசிப்பதற்காக பாலஸ்தீனம் வந்துள்ளார். அங்குதான் தங்கியிருக்கிறார். இதோ இப்பொழுதே இந்த மடல் அவர் கையில் கிடைக்கும் வகையில் உடனே அனுப்பி வைக்கிறேன்.

**(அரபு நாடுகளில் ஒன்றான ஏமனைச் சேர்ந்த அதீ பின் ஹாத் தம் என்பவர் அந்த குறுநில மன்னரிடம் பணி செய்து கொண்டிருந்தார். அவர் கிறிஸ்தவ பாதிரி. அதற்கான அடையாளமாக வெள்ளிச் சிலுவை ஒன்று அவரது கழுத்தை அலங்கரித்துக்கொண்டிருந்தது. இவர், அரேபியாவின் பெரும் கொடைவள்ளல் என்று வரலாற்றில் பதிவாகியுள்ள ஹாத்தம் தாயி உடைய மகனும் ஆவார். )**

**குறுநில மன்னர்:** அதீ பின் ஹாத்தமே! இங்கே வாருங்கள்! நீங்கள்தான் இந்தப் பணியை நிறை வேற்றுவதற்கு மிகவும் பொருத்தம். இந்தக் கடிதத்தைக் கொண்டுபோய் பலஸ்தீனத்தில் தங்கியுள்ள ரோமாபுரி சக்கரவர்த்தியிடம் கொடுத்து விட்டு வாரும்.

அதீ பின் ஹாத்தம்: அவ்வாறே செய்கிறேன்.

- திஹ்யா கல்பி கொண்டு வந்த கடிதத்தை ரோமப் பேரரசர் ஹெர்குலிஸ் வசம் ஒப்படைப்பதற்காக அதீ பின் ஹாத்தம் புரவி மீது புறப்படுகிறார், **பாலஸ்தீனம்** நோக்கி!

(திரை விழுகிறது)

# காட்சி 8

## பங்குபெறுவோர்

**அதீ பின் ஹாத்தம், ஹெர்குலிஸ் மன்னன், மந்திரிகள், அரசவைப் பிரதானிகள், அரசாங்க அதிகாரிகள்.**

**(பின்னணிக் குரல்: விருத்தசேதனம் செய்யும் பழக்கம் உடைய மக்கள் யார் என்கிற பிரச்சினை ரோமாபுரி மன்னரின் தர்பாரில் நடந்து கொண்டிருந்த நிலையில் அதி பின் ஹாத்தம் அங்கு வ கிறார்!**

**அரச தர்பாரில் ஹெர்குலிஸ் மன்னர் அமர்ந்திருந்த கம்பீரமான சிம்மாசனத்தின் அருகே வந்து தலை குனிந்து மரியாதை செலுத்திய வண்ணம் முஹம்மது நபி (ஸல்) அவர்களன் அழைப்பு மடலைக் கொடுக்கிறார்! மன்னர் அதனை மிகுந்த மரியாதையுடன் பெற்றுக் கொள்கிறார், அப்போது நடைபெற்ற மற்றொரு விநோதம் ... அது என்ன?)**

**ஹெர்குலிஸ்:** (பல்வேறு சிந்தனைகளுக்கு மத்தியில் ... இந்த மடலைக் கொண்டுவந்த இந்த மனிதரைப் பார்த்தால் அரேபியாவைச் சேர்ந்தவர்போல்தான் தெரிகிறார். இவரைச் சோதித்துப்பார்த்தால் நம்மை வாட்டிக் கொண்டிருக்கும் புதிருக்குச் சரியான விடை கிடைக்கலாம் அல்லவா?

இவ்வாறு தமக்குள் மெதுவாகச் சொல்லிக்கொள்கிறார். உடனே அண்ணல் நபியின் மடலைக் கொண்டு வந்த **அதி பின் ஹாத்தமை** அருகில் அழைத்து ...) சகோதரரே! அரேபியாவில் நீங்கள் எந்தப் பகுதியைச் சேர்ந்தவர்?

**அதீ பின் ஹாத்தம்:** நான் ஏமனைச் சேர்ந்தவன். ஆனால் நான் பணி செய்வது புஸ்ரா மாகாணத்து குறுநில மன்னரின் அரசவை யில்தான்!

**மன்னர்:** (சில அதிகாரிகளை அழைத்து காதோடு இரகசியமாகக்) கூறுகிறார்: இவரைத் தனியாக அழைத்துச் சென்று இவருக்கு விருத்த சேதனம் செய்யப்பட்டுள்ளதா என்று பரிசோதனை செய்து பாருங்கள்.

(அவரைத் தனியே அழைத்துச்சென்று பரிசோதனை செய்து பார்த்த அரசாங்க அதிகாரிகள், மன்னர் அருகே வந்து)

**அதிகாரி:** ஆம், இவருக்கு விருத்த சேதனம் செய்யப்பட்டிருக்கிறது

**மன்னர்:** (ஒரு முடிவுக்கு வந்தவராக, அதீ பின் ஹாத்தமை நோக்கி கேட்கிறார்:) சகோதரரே! உங்கள் பகுதிகளில் ஏதாவது புதிய நிகழ்ச்சி நடைபெற்றுள்ளதா?

**அதீ பின் ஹாத்தம்:** ஆம், மக்கா நகரில் புதிதாக ஒருவர் தோன்றி யிருக்கிறார். அவர் தன்னை நபி என்று கூறிக்கொண்டு புதியதொரு மார்க்கத்தைப் பிரச்சாரம் செய்கிறார். அவர் இவ்வாறு பிரச்சாரம் செய்ய ஆரம்பித்து பற்பல ஆண்டுகள் ஓடிவிட்டன. இப்பொழுது அவர் யஸ்ரிப் (மதீனா) நகரில் இருக்கிறார். அவரைப் பின்பற்று பவர்களும் மதீனா சென்று அங்கு குடியேறி விட்டார்கள். ஆனால் நான் அவரையும் கண்டுகொள்வதில்லை. அவர் பிரச்சாரம் செய்யும் அவரது புதிய மார்க்கத்தைப் பற்றியும் பெரிதும் அலட்டிக்கொள்வதில்லை.↓

மகா சக்கரவர்த்தி அவர்களே! இப்பொழுது கொடுத்த மடல் அந்த நபி உங்களுக்காக எழுதியதுதான்! இதனை அவருடைய ஒரு தோழர்தான் புஸ்ரா மாகாண மன்னரிடம் அதை ஒப்படைத்தார். அதைத்தான் தாங்களிடம் நான் கொண்டுவந்தேன்.

**மன்னர்:** (அதீ பின் ஹாத்தமை நோக்கி) சகோதரரே! அது தொடர்பாக சில விஷயங்களைத் தெரிந்து கொள்வதற்காகத்தான் இப்படி ...உங்களிடம் சில விவரங்கள் கேட்கிறோம்! அரபுகள் விருத்த சேதனம் செய்யும் பழக்கம் உடையவர்களா?

**அதீ பின் ஹாத்தம்:** ஆம், அரபு மக்கள் அனைவரும் விருத்த சேத னம் செய்யும் பழக்கம் உடையவர்களே!

**மன்னர்:** (கலக்கம் அடைந்தவராக...) நான் எதைப்பற்றி அச்சம் கொள்கிறேனோ அது நடைபெற்றே தீரும் போலிருக்கிறது! எதிர் காலத்தில் எனது இந்த ஆட்சி அதிகாரத்தைக் கைப்பற்றப் போகிறவர்கள் இந்த அரபு மக்களாகத்தான் இருக்கும்! அதில் சந்தேகமே இல்லை! ஆனால் அது பற்றி நினைக்கவே உள்ளம் பதறுகிறது!

(மன்னர் மிகவும் பீதியடைந்தவராக ஆழ்ந்த சிந்தனையுடன் தர்பாரில் குறுக்கும் நெடுக்குமாக உலாவு கிறார்... நாம் எதிர்பார்த்த அந்த தீர்க்கதரிசிதான் இந்த நபியா? அவர் மீது விசுவாசம் கொள்ளுமாறு அழைத்து ஒரு மடலையும் நமக்கு அனுப்பி வைத்துள்ளாரே! ..என்ன செய்வது? எதுவும் புலப்படவில்லையே! முதலில் இந்த நபியின் வருகை பற்றி தீரவிசாரிக்க வேண்டும். அவர் உண்மையான நபிதானா? என்பதை முதலில் முடிவு செய்து கொள்ள வேண்டும் ...இப்படி பலவாறு சிந்திக்கிறார்., இடையிடையே ஏதேதோ புலம்புகிறார்!)

---

↓ **ஆனால் இந்த அதி பின் ஹாத்தம் பின்னாட்களில் இஸ்லாத்தில் இணைந்து நபிகளாரின் அன்புத் தேழர்களில் ஒருவராக ஆனார்!**

சிறிது நேரத்திற்குப் பிறகு சிம்மாசனத்தில் அமர்கிறார். உடனே அதிகாரிகளை அழைத்துக் கூறுகிறார்.
**மன்னர்:** இதோ! பாருங்கள்! மக்காவில் தோன்றியுள்ள இந்த நபியின் குலத்தைச் சேர்ந்தவர்கள் -உறவினர்கள் யாராவது இந்தப் பகுதியில் கிடைக்கிறார்களா என்று தேடிப்பாருங்கள். ஷாம் தேசத்தின் எந்தப் பகுதி களையும் விட்டுவைக்காமல் மூலைமுடுக்குகள் எங்கும் சல்லடைபோட்டுத் தேடுங்கள். எப்படியாவது அப்படிப் பட்ட ஒரு நபரையேனும் பிடித்துக்கொண்டு வாருங்கள்.

(அரசு அதிகாரிகள், மன்னரின் கட்டளையை நிறைவேற்றுவதற்காக விரைகிறார்கள். மக்கா நகரத்தைச் சேர்ந்த வியாபாரிகள் யாராவது பாலஸ்தீனம் வந்திருக்கிறார்களா? எங்காவது கிடைக்கிறார்களா? என்று தேடுகிறார்கள்., ரோமாபுரியின் பல பகுதிகளிலும்!)

(திரை விழுகிறது)

# காட்சி 9

# பங்கேற்போர்

**அபூ சுப்யான், முஃகீரா பின் ஷு அபா, அபூ சுப்யானின் வியாபாரப் பணியாட்கள், மக்காவின் பொது மக்கள்**

**(பின்னணிக் குரல்:**
**பால் என்றால் வெண்மை**
**பாலைவனம் என்றால் மணற்பரப்பு!**
**அரேபியா என்றால் பெட்ரோல் - அதுபோல்**
**அரேபியர்கள் என்றாலே வியாபாரிகள்தான்!**

**இதோ! ஹு தைபிய்யா உடன்படிக்கை கையெழுத்தானதும் மக்களிடையே பகைமைக்குத் திரையிடப்பட்டது. அமைதிப் பூங்காவாக அரேபியா மலர்ந்தது! அதைத் தொடர்ந்து முஸ்லிம்களுக்கும் மக்கத்து நிராகரிப்பாளர் களுக்கும் மத்தியில் முன்பு போலவே சமூகப் பொருளாதார உறவுகள் மலர்கின்றன. மக்காவில் இருந்து மதீனா வுக்கும் மதீனாவில் இருந்து மக்காவுக்கும் மக்கள் எவ்வித தயக்கமும் அச்சமுமின்றி பயணம் மேற்கொள்கி றார்கள். இதோ! மக்கா வாசிகள் வழக்கம்போல் பல தேசங்களுக்கும் பரந்து செல்கிறார்கள். முன்னைவிட அதிக உற்சாகத்துடன் வியாபாரப் பரிவர்த்தனை யைத் தொடங்குகிறார்கள்...!)**

மக்காவில் இருந்து பெரிய அளவிலான வியாபாரக் கூட்டம் ஒன்று ஷாம் தேசம் நோக்கிப் புறப்படத் தயாராகிறது. அதனை முறைப்படுத்தி அனுப்பி வைப்பதன் கடைசி முயற்சியில், மக்காவின் முக்கியமான பிரமுகரும் குறைஷி குலத் தலைவர்களில் ஒருவரு மான அபூ சுப்யான் மும்முரமாக ஈடுபட்டிருக்கிறார்.
**அபூ சுய்யான்:** (தனது நண்பர் முஃகீராவிடம்) நண்பரே! எல்லா ஏற்பாடுகளும் முறையாகவே நடைபெறுகிறது. இன்னொன்றையும் நாம் செய்தால் எல்லா மக்களும் நமது வியாபாரத்தில் பங்கு பெறு வார்கள்., நம்மிடம் அதிக அளவில் சரக்குகள் வந்து குவியும். அதாவது நமது வியாபாரக் கூட்டம் ஷாம் தேசம் செல்லவிருப்பது பற்றி மக்களுக்கு மத்தியில் பொதுஅறிவிப்புச் செய்வதற்கு ஏற்பாடு செய்யலாம் அல்லவா?அப்படிச் செய்தால் என்ன? அப்பொழுதுதானே எல்லோருக்கும் செய்தி எட்டும். அவரவர்களிடம் உள்ள பொருட்களை - வியாபாரச் சரக்குகளை சீக்கிரம் சீக்கிரமாகக் கொண்டு வந்து நம்மிடம் சேர்ப்பார்கள். எனவே பொருத்தமான ஓர் ஆளை அனுப்பி பலமாகப் பறைஅறைந்து முறையாக அறிவிப்புச் செய்யச் சொல்லம். ... ம்ம் ... சீக்கரம் காரியங்கள் நடக்கட்டும்.
**முஃகீரா:** இதோ! ஓர் ஆளை அனுப்பி வைத்தால், போகிறது!

(முஃகீரா தனது பணியாட்களில் ஒருவரை அழைத்து - அபூ சுப்யானின் தலைமையில் வியாபாரக் கூட்டம் ஒன்று ஷாம் தேசம் செல்ல இருப்பது பற்றி வீதி வீதியாகச் சென்று உரத்த குரலில் பொது அறிவிப்புச் செய்யுமாறு பணிக்கிறார்)

அந்த ஆள் மக்காவில் வீதிவீதியாகச் சென்று பலமாக நகரா அடித்து உரத்த குரலில் அறிவிக்கிறார். அவரது குரலைக் கேட்டு ஆணகளும் பெண்களும் சிறுவர்களும் பெரியவர்களும் அனைவரும் வீதிக்கு வந்து வேடிக்கை பார்க்கிறார்கள்.

**அறிவிப்பாளர் உரத்த குரலில் கூறுகிறார்:**
''இதன் மூலம் எல்லோருக்கும் அறிவிப்பது என்னவெனில், வணிகத் தந்தை அபூ சுப்யான் தலைமையில் மாபெரும் வணிகப் பயணம் ஷாம் தேசம் புறப்பட இருக்கிறது. அதில் முதலீடு செய்ய விரும்பு வோர் தங்களு டைய வியாபாரச் சரக்குகளைச் சீக்கிரம் கொண்டு வந்து சேர்க்குமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். அதிக லாபம் பெறுவதற்கான பொன்னான நேரமிது''

இந்த அறிவிப்பைத் தொடர்ந்து மக்கள் தத்தம் பொருட்களை எடுத்துக்கொண்டு விரைந்து வந்து அபூ சுப்யானிடம் கொடுக்கிறார்கள். மக்கமா நகரின் ஒவ்வொரு குடும்பத்தினரும் அந்த வியா பாரத்தில் பங்கு பெற ஆர்வம் பிறக்கிறது. பேரீத்தம் மற்றும் திராட்சைப் பழக்குலைகளும் கோதுமை மூட்டைகளும் பெரும் குவிய லாக அங்கே குவிக்கப்படுகிறது. அவை எல்லாவற்றையும் அபூ சுப்யானின் ஆட்கள் ஒட்டக அம்பாரிகளில் அடுக்கி வைத்துக் கட்டுகிறார்கள்.

மக்கத்து பூமியில் எங்கும் மகிழ்ச்சி ஆரவாரம்! முஸ்லிம்களுக் கும் குறைஷிகளுக்கும் புதிதாக ஏற்பட்ட சமாதான உடன்படிக்கை பற்றியே ஊரெங்கும் ஒரேபேச்சு. **ஹு தைபிய்யா** உடன்படிக்கையை எல்லோரும் வரவேற்கிறார்கள்., எல்லா மக்களும் அதனைப் புகழ்கி றார்கள்.

தெரு ஓரத்தில் கூடியிருந்த கும்பலில் ஒருவர் -

"சமாதான உடன்படிக்கை ஏற்பட்டது எவ்வளவு நல்லதாப் போச்சு! முஹம்மதுடனும் அவருடைய தோழர் களுடனும் எத்தனை காலத்திற்குத்தான் நாம் சண்டைகள் போட்டுக்கொண்டிருப்பது! போரும் பூசலுமாய் - எதிரும் புதிருமாய் இருந்து கொண்டிருப்பது! ...சுதந்திரமாக எங்கும் செல்ல முடிவதில்லை. அதனால் வியாபா ரப் பரிவர்த்தனைகள் எல்லாம் முடங்கிப்போனது. நமது பொருளாதாரமே நசிந்து போய்விட்டது! எவ்வளவு நஷ்டம்! எவ்வளவு கஷ்டம்!"

**மற்றொருவர்:**

" முஹம்மத் நம்ம ஊரில் பிறந்தவர்தானே! நம்ம சொந்தபந்தம் தானே! அவருடைய தோழர்கள் யார்? எந்த மதத்தை அவர்கள் பின்பற்றினாலும் இந்த மண்ணின் மைந்தர்கள்தானே! அவர்களை என்றைக்கும் சண்டைக் காரர்களாகவே பார்ப்பது என்ன நியாயம்? கொஞ்சகாலம் சண்டை என்றால் பிறகு சமாதானமாகப் போக வேண்டியதுதானே! "

- அங்கே ஒட்டக அம்பாரிகளில் பொருட்கள் எல்லாம் முறையாக ஏற்றப்பட்டு வரிசையாக அடுக்கி வைத்துக் கட்டப்பட்டு சுமார் 30 ஒட்டகங்கள் மக்காவில் இருந்து ஷாம் தேசம் நோக்கி புறப்படுகின்றன.

(திரை விழுகிறது)

## காட்சி 10

### பங்குபெறுவோர்

**அபூ சுப்யான். முஃகீரா பின் ஷு அபா, வியாபாரக் கூட்டத்தின் பணியாட்கள். பொதுமக்கள். ரோமாபுரியின் அரசு அதிகாரிகள்.**

**(பின்னணிக் குரல்: வியாபாரம் என்பது அரபுகள் அனைவருக்கும் கைவந்த கலைதான்! அதிலும் மக்கத்து குறைஷிகளோ பிறவி வியாபாரிகள்! எனவே வணிகக்கலை பற்றி வேறெந்த மக்களும் - வேறெந்த நாட்டவரும் அவர்களுக்கு வாய்ப்பாடம் சொல்லிக் கொடுக்க வேண்டிய அவசியம் இல்லை!**

**அதுவும் மக்கத்து அரபிகள் திறமைமிக்க வியாபாரிகள்! அவர்கள் திரட்டிக்கொண்டு வந்த பொருட்களோ தரமானவை! மக்களுக்குப் பிடித்தமானவை! பிறகு கேட்கவா வேண்டும், வாடிக்கையாளர்கள் குவிவதற்கு? எல்லாச் சரக்குகளும் மளமளவென விற்றுத் தீர்ந்தன. எதிர்பார்த்ததை விட இரட்டிப்பு லாபம்! ஆனால் எதிர்பாராத வகையில் இன்னொரு கஷ்டம்! அது என்ன? அது எப்படி வந்தது?)**

வணிகக்குழு ஷாம் தேசத்தினுள் நுழைகிறது. பாலஸ்தீனத்தின் முக்கிய பெரிய நகரமான **காஸா குன்று தான்** சந்தை வியாபாரத் திற்கு ஏற்ற பகுதி! அங்குதான் சரக்குகளை அவிழ்க்க வேண்டுமென முன்னரே அபூ சுப்யானும் அவருடைய நண்பர் முஃகீராவும் முடிவு செய்திருந்தனர். அதன்படி சரக்கு ஒட்டகங்கள் அனைத்தும் காஸா குன்றை நோக்கி ஓட்டிச் செல்லப்பட்டு சந்தை விரிக்கப்படுகிறது.

**அபூ சுப்யான்:** (முஃகீராவை நோக்கி) நண்பரே! நாம் கொண்டு வந்த பொருட்கள் அனைத்தும் விற்று முடிந்து விட்டன. எதிர்பார்த்தபடி நல்ல இலாபம்தான்! இதேபோல் மக்காவில் கொண்டுபோய் விற்பனை செய்வதற்குப் பொருத்தமான - அங்குள்ள மக்களுக்குத் தேவையான பொருட்களை இங்கிருந்து வாங்கிச் சென் றால் நல்லது என்று நினைக்கிறேன். அப்படி என்னென்ன பொருட்களை இங்கு வாங்கலாம்? உனது அபிப்பிராயம் என்ன?

**முஃகீரா:** எப்பொழுதும் நாம் இப்படிச் செய்வது வழக்கம்தானே! அப்படியே செய்வோம்! மக்காவில் விற்பனை செய்வதற்குப் பொருத்தமான - தேவையான பொருட்களை இங்கிருந்து வாங்கிச் செல்ல வேண்டும்தான். என்னென்ன பொருட்களை வாங்கலாம் என்பதை நீரே முடிவு செய்யும். நீரே சொல்லும்.

**அபூ சுப்பான்:** மக்காவில் கிடைக்காத பொருட்களை உதாரணமாக ஹள்ரமீ பிராண்ட் செருப்புகள், பதனிடப் பட்ட தோலினால் ஆன உயர்ரகச் செருப்புகள் போன்றவற்றை அதிகம் வாங்கிக்கொள்ளலாம். இப்போது மக்கத்து இளைஞர்கள் - அதுவும் பணக்கார வீட்டுப் பிள்ளைகள் விரும்பி வாங்குகிறார்கள்.

இதேபோல் ஷாம் தேச ஜு ப்பா, பட்டு கலந்த எகிப்திய பஞ்சாடை, யமன் நாட்டு சால்வை, நஜ்ரான் நாட்டு சால்வை ஆகியவற்றையும் அதிகம் வாங்கிக்கொள்ளலாம். வாசனைப் பொடிகளையும் திரவியங்களை யும் வாங்கிக்கொள்ளலாம். இவற்றை இப்பொழுது மக்காவில் வசதியான குடும்பத்தினர் அதிகம் பயன்படுத்து கிறார்கள்.

**முஃகீரா:** அப்படியே செய்வோம்.

- இவ்வாறு மக்கத்து மக்களுக்குத் தேயையான பொருட்களை அதிக அளவில் வாங்கி ஒட்டகங்களில் வைத்துக் கட்டிக் கொண்டிருக்கும்போது ரோமப்பேரரசின் அதிகாரிகள் அங்கு வருகிறார்கள்.

**ஓர் அதிகாரி:** (அங்கிருந்த ஒரு பணியாளைத் தனியாக அழைத்துச் சென்று) இந்த வியாபாரக் கூட்டம் எங்கிருந்து வந்துள்ளது?

**அந்த நபர்:** நாங்கள் மக்கா நகரில் இருந்து வந்துள்ளோம். இதோ! இவர்தான் வணிகத் தந்தை அபூ சுப்யான். குறைஷி குலப் பெருந்தலைவர் ...

(உடனே அரசாங்க அதிகாரிகள் அனைவரும் அபூசுப்யானின் வணிகக் கூட்டத்தைச் சுற்றி வளைக்கி றார்கள்)

**அதிகாரிகளில் ஒருவர்:** ரோமப் பேரரசர் உங்கள் அனைவரையும் தனது தர்பாருக்கு அழைத்து வருமாறு கட்டளை இட்டிருக்கிறார். எல்லோரும் புறப்படுங்கள் ...

(வியாபாரக் கூட்டத்தின் பொறுப்பாளர்களும் பணியாட்களும் - அனைவரும் அதர்ச்சி அடைகிறார்கள்! காரண மில்லாமல் தங்களை மன்னர் பிடித்துவரச் சொல்வது என்று தெரியாமல் - செய்வது அறியாமல் திகைத்து நிற்கிறார்கள்)

**வியாபாரப் பணியாள் ஒருவர்:** இங்கு நேர்மையான முறையில் வியாபாரம் செய்வதற்குக்கூட அனுமதி இல்லையா?

**அபூ சுப்யான்:** (மன்னர் அனுப்பிய அதிகாரிகளிடம் தகராறு செய்த நிலையில்) எங்களைப் பிடித்துச் செல்வ தற்கு என்ன காரணம் என்பதை முதலில் சொல்லுங்கள்! நாங்கள் இன்று நேற்று அல்ல பல ஆண்களாக இங்கு வந்து வியாபாரம் செய்து கொண்டிருக்கிறோம். இந்நாட்டுக்கோ மன்னருக்கோ நாங்கள் எந்தத் தீதும் நினைத்ததில்லை! பிறகு எங்களை ஏன் கைது செய்கிறீர்கள்?

**அதிகாரிகள்:** மன்னர் உங்களை அழைத்து வரச் சொல்லி ஆணை யிட்டிருக்கிறார்., எங்களுக்கு இடப்பட்ட கட்டளையை நாங்கள் நிறைவேற்றுகிறோம்., அவ்வளவுதான்! என்ன காரணம் என்பதை அரச தர்பாரில் வந்து கேட்டுக்கொள்ளுங்கள்.

(அபூ சுப்யானையும் அவருடன் வந்த பணியாட்களையும் மக்கத்து வியாபாரிகள் அனைவரையும் ரோமாபுரி அதிகாரிகள் அழைத்துவந்து மன்னர் ஹெர்குலிஸ் தர்பாரில் ஆஜர் படுத்துகிகிறார்கள்)

(திரை விழுகிறது)

# காட்சி 11

## பங்குபெறுவோர்

**ஹெர்குலிஸ் மன்னர், மொழிபெயர்ப்பாளர், அபூ சுப்யான், அவருடன் வந்த மக்கா வாசிகள், பொதுமக்கள், அரசவைப் பிரதானிகள்**

**(பின்னணிக் குரல்: அபூ சுப்யான் தலைமையில் வந்த வியாபாரக் கூட்டத்தைச் சேர்ந்த அனைவரையும் அரசாங்க அதிகாரிகள் கைது செய்து, ரோமாபுரி மன்னிரின் தர்பாருக்கு அழைத்துக் கொண்டு வரவே, அந்தச் செய்தி நாட்டுக்குள் ஆங்காங்கே பரவுகிறது. மக்கமா நகரில் கடைசிக் காலத்துத் தீர்க்கதரிசியாக ஓர் புதிய நபி தோன்றி யிருப்பது பற்றியும் ஒருபுதிய மார்க்கம் - இஸ்லாம் பிரச்சாரம் செய்யப் படுவது பற்றியும் மக்காவைச் சேர்ந்த வியாபாரக் கூட்டத் தினர் தர்பாருக்கு அழைத்து வரப்பட்டுள்ளனர்., புதிய மதம் தொடர் பாக மன்னர் அவர்களிடம் விசாரணை செய்வது பற்றியும் பரபரப்பாகவும் ஆச்சரியத்துடனும் மக்கள் பேசிக்கொள்கிறார்கள். என்னதான் நடக்கப் போகிறது, பார்க்கலாம் என்று வேடிக்கை பார்க்கப் பெரும்கூட்டம் கூடுகிறது! ஆங்காங்கு இருந்து மக்கள் சாரை சாரையாக அரண்மனை நோக்கிக் கிளம்புகிறார்கள்.ரோமப் பேரரசரின் தர்பாரில் மக்கள் கூட்டம் நிரம்பி வழிகிது!)**

**ஹெர்குலிஸ்:** தன்னை நபி என்று வாதாடுகிற இந்த மனிதருக்கு நெருங்கிய உறவினர் உங்களில் யார்?

**அபூ சுப்யான்:** நான்தான் அவருக்கு மிகவும் நெறுங்கிய உறவினர்.

**ஹெர்குலிஸ்:** உமது பெயர் என்ன?

**அபூ சுப்யான்:** எனது பெயர் ஸக்ர் பின் ஹர்ப் பின் உமைய்யா. எல்லோரும் என்னை அபூ சுப்யான் என்றே அழைக்கிறார்கள்.

**ஹெர்குலிஸ்:** (தன்னுடைய அதிகாரிகளிடம்) அபூ சுப்யானை என் அருகே அழைத்து வாருங்கள்., அவருடன் வந்திருப்பவர்களை அழைத்து வந்து அபூ சுப்யானுக்குப் பின்னால் நிறுத்துங்கள் என்று ஆணையிட்டார்.

பின்னர் தமது மொழிபெயர்ப்பாளரிடம் நான் அந்த மனிதரைப் பற்றி (அபூசுப்யானாகிய) இவரிடம் கேட்பேன். நான் கேட்கும் கேள்விகளுக்கு இவர் பொய்யான தகவல்களைச் சொன்னால் அதை என்னிடம் தெரிவிக்க வேண்டும் என்று அவருடன் வந்திருப்பவர்களிடம் மொழிபெயர்த்துச் சொல் என்று ஆணையிட்டார்.

**(ஹெர்குலிஸ் மன்னரின் விசாரணை ஆரம்பமாகிறது)**

**மன்னர்:** உங்களிடையே தோன்றியுள்ள இந்த புதிய நபியின் குலம் எத்தகையது?

**அபூ சுப்யான்:** அவர் மிகச் சிறந்த குலமாகிய குறைஷி குலத்தைச் சேர்ந்தவர்.

**மன்னர்:** இவருக்கு முன்னர் உங்களில் யாரேனும் எப்போதாவது (நானும் ஒரு நபியாக அனுப்பப்பட்டுள்ளேன் என்ற) இந்த வாதத்தைச் செய்ததுண்டா?

**அபூ சுப்யான்:** இல்லை.

**மன்னர்:** இவரது முன்னோர்களில் யாராவது மன்னர்களாக இருந்தார்களா?

**அபூ சுப்யான்:** இல்லை

**மன்னர்:** இப்பொழுது இவரைப் பின்பற்றுகிறவர்கள் மக்களிலேயே சிறந்தவர்களா? அல்லது சாமானியர்களா?

**அபூ சுப்யான்:** மக்களில் சாமானியர்கள்தான் (பெரும்பாலும்) இவரைப் பின்பற்றுகிறார்கள்.

**மன்னர்:** இவரைப் பின்பற்றுவோரின் எண்ணிக்கை அதிகமாகிக் கொண்டு செல்கிறதா? குறைகிறதா?

**அபூ சுப்யான்:** இவரைப் பின்பற்றும் மக்கள் கூட்டம் அதிகமாகிக் கொண்டே செல்கிறது!

**மன்னர்:** இவரது மார்க்கத்தில் இணைந்த பின்னர் அதன் மீது அதிருப்தி அடைந்து யாரேனும் மதம் மாறி யிருக்கிறார்களா?

**அபூ சுப்யான்:** இல்லை

**மன்னர்:** இவர் இவ்வாறு வாதிப்பதற்கு முன் இவர் பொய் சொல் லக் கூடியவர் என்று எப்போதாவது நீங்கள் சந்தேகித்துண்டா?

**அபூ சுப்யான்:** இல்லை

**மன்னர்:** அவர் வாக்கு மீறியது உண்டா?

**அபூ சுப்யான்:** (இதுவரை) இல்லை. நாங்கள் இப்பொழுது அவரு டன் ஓர் உடன்படிக்கை செய்துள்ளோம். அதில் அவர் எப்படி நடந்து கொள்ளப்போகிறார் என்பது எங்களுக்குத் தெரியாது. ↓

**மன்னர்:** அவருடன் நீங்கள் யுத்தம் செய்திருக்கிறீர்களா?

அபூ சுப்யான் : ஆம்

**மன்னர்:** அவருடன் நீங்கள் நடத்திய யுத்ததத்தின் முடிவுகள் எவ்வாறு இருந்தன?

**அபூ சுப்யான்:** எங்களுக்கும் அவருக்கும் இடையே போர் என்பது தண்ணீர் வாளிகள் போன்று அமைந் திருந்தன. (அதாவது, கிணற்றில் இருந்து மாறி மாறித்தானே தண்ணீர் இறைக்க முடியும். அது போன்று வெற்றியும் தோல்வியும் எங்களுக்கும் அவருக்கும் இடையே மாறி மாறித்தான் வந்திருக்கிறது. சில சமயம் அவர் வெற்றி பெற்றிருக்கிறார். சில சமயம் நாங்கள் வெற்றி பெற்றிருக்கிறோம்)

**மன்னர்:** அவர் உங்களுக்கு என்னதான் போதிக்கிறார்?

**அபூ சுப்யான்:** இறைவன் ஒருவனையே வணங்குங்கள்., அவனுக்கு எதனையும் இணைக்கடவுளாக்கி வணங்காதீர்கள். உங்கள் முன்னோர்கள் கூறிவந்த அனைத்தையும் விட்டுவிடுங்கள் என்கிறார். தொழுகை, உண்மை பேசுதல், கற்புநெறி, உறவினர்களுடன் இணங்கிவாழுதல் போன்ற உயர் பண்புகளைக் கடைப்பிடிக் குமாறு ஏவுகிறார்.

(திரை விழுகிறது)

## காட்சி 12

### பங்குபெறுவோர்

**ரோமப் போரசர், மொழிப்பெயர்ப்பாளர், அபூ சுப்யான், அவருடன் வந்த மக்காவாசிகள், அரசவைப் பிரதானிகள்**

↓ **இந்த இடத்தில் அபூ சுப்யான் மேலும் குறிப்பிட்டார்: அப்போதைக்கு நபி (ஸல்)அவர்கள் மீது குறை கற்பிக்க இந்த வார்த்தையை விட்டால் வேறு எந்த வார்த்தையையும் எனது பதிலில் நுழைத்திட எனக்கு வாய்ப்பில்லை! அவரது இந்தக் கூற்று எதைச் சுட்டிக் காட்டுகிறது? உண்மைக்குப் புறம்பான தகவலைச் சொன்னால் தம்முடன் வந்த ஆட்கள் அதனைச் சுட்டிக் காட்டிவிடுவார்கள்., அவர்களை தமக்குப் பின்னால் நிறுத்தி இருக்கிறார் ஹெர்குலிஸ் மன்னர். எனவே அபூ சுப்யான் எச்சரிக்கையாகவே பதில் சொல்லிக்கொண்டு வருகிறார் என்பதையே இது சுட்டிக் காட்டுகிறது!**

**(பின்னணிக் குரல்: அபூ சுப்யானிடம் விசாரணை நடத்திய பிறகு மன்னர் அளிக்க இருக்கும் தீர்ப்பு என்ன? சொல்லப்போகும் கருத்து என்ன? என்று எல்லோரும் ஆவலுடனும் பரபரப்புடனும் எதிர்பார்க்கிறார்கள். அந்தப் பரபரப்புக்கு மத்தியில்...! மன்னர் தன்னுடைய மொழிபெயர்ப்பாளரை அழைக்கிறார்)**

**மன்னர்:** (மொழிபெயர்ப்பாளரிடம்) நான் சொல்வதைச் சரியாக மொழிபெயர்த்து இவர்களிடம் சொல்லும்.

**மன்னர்:** (அபூ சுப்யானைப் பார்த்து)

அபூ சுப்யானே! நான் உம்மிடம் அந்த நபியின் குலத்தைப் பற்றி விசாரித்தேன். அதற்கு அவர் உயர்ந்த குலத்தைச் சேர்ந்தவர்தாம் என்று சொன்னீர்.

**நானும் அதையே முன்மொழிகிறேன். முற்காலத்தில் தோன்றிய எல்லா நபிமார்களும், அவரவரின் சமூகத்தில் உயர் குலத்தவர் களாகவே இருந்தனர்.**

இவ்வாறு உங்களில் யாரேனும் தாம் நபியாக வந்திருப்பதாக இதற்கு முன்னர் வாதித்ததுண்டா? என்று கேட்டேன். அதற்கு நீர் இல்லை என்று குறிப்பிட்டீர்.

**இவருக்கு முன்பு எவரேனும் இவ்வாறு வாதம் செய்திருந்தால் முன்னர் செய்யப்பட்டு வந்த ஒருவாதத்தைப் பின்பற்றித்தான் இவ ரும் தன்னை நபி என்று சொல்கிறார் என்று நான் கூறியிருப்பேன்.**

இவரது முன்னோர்களில் யாரேனும் மன்னர்களாக இருந்திருக்கி றார்களா என்று உம்மிடம் நான் கேட்ட பொழுது இல்லை என்று சொன்னீர்.

**இவரது முன்னோர்களில் யாராவது மன்னராக இருந்திருந்தால் தம் முன்னோர்களின் ஆட்சியதிகாரத்தை அடைய விரும்பும் மனிதர் தான் இவர் என்று சொல்லியிருப்பேன்.**

இவ்வாதத்தைச் செய்வதற்கு முன்பு அவர் பொய் சொல்வதாக நீங்கள் அவரைச் சந்தேகித்ததுண்டா என்று கேட்டேன். அதற்கு நீர் இல்லை என்றீர்.

**மக்களிடம் பொய்சொல்லத் துணியாத ஒருவர் இறைவன் மீது பொய்சொல்லத் துணியமாட்டார் என்றே நான் உறுதியாக நம்புகிறேன்.**

மக்களில் சிறப்புவாய்ந்தவர்கள் அவரைப் பின்பற்றுகிறார்களா? அல்லது சாமானியர்களா? என்று கேட்டேன். சாமானிய மக்கள்தாம் அவரைப் பின்பற்றுகிறார்கள் என்று குறிப்பிட்டீர்.

**எனது கருத்தும் இதுதான். முற்காலத்தில் வாழ்ந்த இறைத் தூதர்களின் வரலாற்றில் அப்படித்தான் நடந்துள் ளது, ஆரம்பத்தில் சாமானியப்பட்டவர்கள்தாம் இறைத்தூதர்களை பின்பற்றி இருக்கிறார்கள். பிறகு நாட்கள் செல்லச்செல்ல எல்லோரும் இறைமார்க்கத் தில் இணைந்துள்ளார்கள்.**

அவரைப் பின்பற்றுகின்றவர்களின் எண்ணிக்கை அதிகமாகிறதா? குறைகிறதா? என்று கேட்டேன். அவர்களின் எண்ணிக்கை அதிக மாகிக் கொண்டு செல்வதாகக் நீர் குறிப்பிட்டீர்.

**அதுதான் உண்மை என்று நானும் முன்மொழிகிறேன். இறைவன் மீதும் இறைத்தூதர்கள் மீதும் மக்களுக்கு ஏற்படும் விசுவாசம் என்பது, முழுமையாய் நிறைவு பெறும்வரையில் அப்படி வளர்ந்து கொண்டுதான் இருக்கும்.**

அவரது மார்க்கத்தில் நுழைந்த பின்னர் யாரேனும் அந்த மார்க்கத்தின் மீது அதிருப்தியடைந்து மதம் மாறியதுண்டா? என்று உம்மிடம் கேட்டேன். நீர் இல்லை என்றீர்.

**அப்படித்தான் இதயத்தில் நுழைந்து விட்ட இறைநம்பிக்கையின் எழில் உறுதியாக இதயத்தில் இடம்பிடித்திருக் கும்.**

அவர் எப்பொழுதேனும் வாக்கு மீறியதுண்டா? என உம்மிடம் கேட்டேன். அதற்கு இல்லை என்று நீர் குறிப்பிட்டீர்.

**இவர் உண்மை நபிதான் என்பதற்கு இதுவே ஆதாரம். இறைவன் அனுப்பும் நபிமார்கள் அப்படித்தான் எப்போதும் - எந்தச் சூழ்நிலையிலும் வாக்கு மீற மாட்டார்கள்.**

**நீர் செல்லியது அனைத்தும் உண்மையானால் (ஒரு காலத்தில்) எனது இரண்டு பாதங்களுக்குக் கீழ் உள்ள இந்த ↓ இடத்தையும் அவர் ஆளுவார். (இப்படிப்பட்ட) ஒரு இறைத்தூதர் (வெகு விரைவில்) தோன்று வார் என்று நான் முன்பே அறிந்திருந்தேன். ஆனால் அரபிகளாகிய உங்களிலிருந்துதான் அவர் தோன்றுவார் என்று நான் எதிர்பார்க்கவில்லை.**

**அவரை சென்றடையும் வழியை நான் அறிந்திருந்தால் மிகுந்த சிரமப்பட்டட்டாவது அவரைச் சந்திப்பேன். (இப்போது) நான் அவருக்கு அருகே இருந்தால் அவரது பாதங்களைக் கழுவி விடுவேன்.**

(திரை விழுகிறது)

---

**↓ இந்த நிகழ்ச்சி நடைபெற்று சரியாக பத்து ஆண்டுகள் கழிந்த பிறகு ஹிஜ்ரி 16 ஆம் ஆண்டு உமர் (ரலி) அவர்களின் ஆட்சி காலத்தில் அபூ உபைதா பின் ஜர்ராஹ் (ரலி) அவர்கள் பாலஸ்தீனத்தை வெற்றி கொண்டார்கள்.**

# காட்சி 13

## பங்குபெறுவோர்

**ரோமப் போரசர், மொழிப்பெயர்ப்பாளர், அபூ சுப்யான், அவருடன் வந்த மக்காவாசிகள், அரசவைப் பிரதானிகள், பொதுமக்கள் பலர்.**

**(பின்னணிக் குரல்: ரோமப் பேரரசர் இவ்வாறு முஹம்மது நபியின் தூதுத்துவத்தை உண்மைப்படுத்தி, புகழ்ந்து நல்ல கருத்தை வெளியிட்டது பற்றி அரச தர்பாரில் பெரும் பரபரப்பு ஏற்படுகிறது! ஆங்காங்கே பலர் அதைப் பற்றி உரக்கப் பேசுகிறார்கள். சிலர் விமர்சித்தனர். வேறு சிலர் ஆதரித்தனர்)**

(அந்தப் பரபரப்புக்கு மத்தியில் ரோமப் பேரரசர் அதிகாரிகளுக்கு ஆணையிடுகிறார்)

**மன்னர்:** முஹம்மது நபி கொடுத்து அனுப்பிய அந்த மடலைக் கொண்டு வாருங்கள்.

**(அதிகாரிகள் நபிகளார் கொடுத்தனுப்பிய மடலை மன்னரிடம் ஒப்படைக்கிறார்கள். நபியவர்களின் மடலை மிகுந்த மரியாதையுடன் மன்னர் பெற்றுக்கொள்கிறார்., அதனை முத்தமிடுகிறார்., கண்களில் வைத்து ஒத்திக் கொள்கிறார்! அரசவையில் கூடியிருந்த அனைத்து மக்களின் ஆவலுக்கும் எதிர்பார்ப்புக்கும் மத்தியில் மரியாதை யோடு மடலைப் பிரித்துப் படித்துப் பார்க்கிறார். மொழிபெயர்ப்பாளிடம் கொடுத்து வாசிக்கச் சொல்கிறார். அதில் எழுதப்பட்டிருந்தது:)**

بِسْمِ اللهِ الرَّحْمَنِ الرَّحِيْمِ ، مِنْ مُحَمَّدٍ رَسُوْلِ اللهِ اِلَى هِرَقْلَ عَظِيْمِ الرُّوْمِ : سَلاَمٌ عَلَى مَنِ اتَّبَعَ الْهُدَى ، اَمَّا بَعْدُ : فَــاِنِّى
أَدْعُوْكَ بِدِعَايَةِ الْاِسْلاَمِ ، اَسْلِمْ تَسْلِمْ ، وَاَسْلِمْ يُؤْتِكَ اللهُ أَجْرَكَ مَرَّتَيْنِ ، وَاِنْ تَوَلَّيْتَ فَاِنَّ عَلَيْكَ اِثْمَ الأَرِيْسِيِّيْنَ

﴿ قَلْ يَا اَهْلَ الْكِتَابِ تَعَالَوْا اِلَى كَلِمَةٍ سَوَاءٍ بَيْنَنَا وَ بَيْنَكُمْ اَلاَّ نَعْبُدَ اِلاَّ اللهَ وَ لاَ نُشْرِكَ بِهِ شَيْئًا وَ لاَ يَتَّخِذَ بَعْضُــنَا بَعْضًــا
أَرْبَابًا مِنْ دُوْنِ اللهِ فَاِنْ تَوَلَّوْا فَقُوْلُوْا اشْهَدُوْا بِأَنَّا مُسْلِمُوْنَ ﴾

محمد رسول الله

(الختم النبوى)

**பொருள்: அளவிலாக் கருணையும் நகரிலாக் கிருபையும் உடைய அல்லாஹ்வின் திருப்பெயரால்!**
**அல்லாஹ்வின் அடியாரும் அவனுடைய தூதருமான முஹம்மது நபி, ரோமாபுரியின் மரியாதைக்குரிய ஹெர்கு லிஸு க்கு எழுதிக்கொள்வது:**

**நேர்வழியைப் பின்பற்றுவோர் மீது சாந்தி நிலவட்டுமாக! நிற்க, இஸ்லாத் தைத் தழுவுமாறு உமக்கு நான் அழைப்பு விடுக்கிறேன். நீர் இஸ்லாத்தை ஏற்பீராக! ஈடேற்றம் பெறுவீர். அல்லாஹ் உமக்கு இரு மடங்கு சன்மானம் வழங்குவான். (இந்த அழைப்பை) நீர் புறக்கணித்தால் உமது நாட்டு மக்களின் பாவமும் உம்மையே சாரும்.**

**கூறுவீராக! வேதம் அருளப்பட்டவர்களே! எங்களுக்கும் உங்களுக்கும் மத்தியில் பொதுவாக உள்ள ஒருவிஷயத்தின் பக்கம் வாருங்கள். (அதாவது) அல்லாஹ்வைத் தவிர (வேறு எவரையும்) நாம் வணங்கக் கூடாது., அவனுக்கு எதனையும் நாம் இணைவைக் கக் கூடாது., மேலும் அல்லாஹ்வை விடுத்து நம்மில் சிலர் சிலரை கடவுளர்களாக ஆக்கிக்கொள்ளக் கூடாது (இந்த அழைப்பினை) நீங்கள் (ஏற்க மறுத்தால், நாங்கள் நிச்சயமாக முஸ்லிம்களாக (இறைவனுக்குக் கீழ்ப்படிந்தவர்களாக) இருக்கிறோம் என்பதற்கு நீங்கள் சாட்சி யாக இருங்கள் என்று(தெளிவாகக்) கூறி விடுங்கள்.**

**அல்லாஹ்வின் தூதர் முஹம்மது**
**(கையொப்ப முத்திரை)**

(மடலைப் படித்துப்பார்த்த மன்னர் ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கி விடுகிறார். தனக்குள் மெதுவாகப் பேசு கிறார்., தன்னைத்தானே கேள்விகள் கேட்டு விடைகள் தேடுகிறார்:)

❁ உண்மையில் இவர் இறைத்தூதர் என்றுதான் தெரிகிறது. சத்தியத்தை எவ்வளவு தெளிவாக எடுத்து ரைக்கிறார். அதனை ஏற்றுக்கொள்ளுமாறு நம்மையும் அழைக்கிறாரே! அவரது அழைப்பை ஏற்றுக் கொள்வதா? வேண்டாமா?உண்மையான ஓர் இறைத் தூதரின் அழைப்பை நாம் எப்படி ஏற்றுக்கொள்ளாமல் இருப்பது?

❁ அல்லாஹ்வைத் தவிர (வேறு எவரையும்) நாம் வணங்கக் கூடாது., அவனுக்கு எதனையும் நாம் இணைவைக்கக் கூடாது என்று இவர் குறிப்பிட்டிருப்பதுதானே சரியான கொள்கை! முக்கட வுள் கொள்கை எப்படி சரியாக இருக்கமுடியும்? பிதா, பரிசுத்த ஆவி, குமாரர் ஆகிய மூவரும் சேர்ந்து எப்படி ஒரே கடவுளாக

ஆக முடியும்! என்ன கொள்கை இது? ஒன்றில் மூன்று! மூன்றில் ஒன்று! கடவுளையே கூறுபோடும் கொள்கையும் ஒரு கொள்கையா?

❀ இன்றைய சீரழிந்த சமுதாயத்தில், இறுதிக் காலகட்டத்தில் இறை மார்க்கத்தின் அடிப்படை சித்தாந்தமாகிய இந்த ஓரிறைக் கொள்கையை உலகில் நிலைநாட்டுவதற்காகத்தான் இறுதி தீர்க்க தரிசியை கர்த்தர் அனுப்பி இருக்கிறாரோ! அப்படி ஒரு தீர்க்கதரிசி வருவார் என்று நமது வேதங்களில் காணப்படும் முன்னறிவிப்பு உண்மையாகி விட்டதோ!

❀ நாம் அவைவரும் இந்த தீர்க்கதரிசியை - நபியைப் பின்பற்றி வாழ்ந்தால்தான் கர்த்தரின் கருணை கிடைக்குமோ? மறுவுலக வாழ்வில் நாம் கதி மோட்சம் அடைய முடியுமோ?

ஆனால் நமது நாட்டு மக்கள் இந்த வீணாப்போன முக்கடவுள் கொள்கையில் மூழ்கிக்கிடக்கிறார்களே! என்ன செய்வது? மூர்க்கத்தனமாக அதனைப் பின்பற்றுகிறார்களே, என்ன செய்வது?

(மன்னர் ஓரிறைக் கொள்கையில் தெளிவு பெறுகிறார். என்றாலும் ஏதேதோ சிந்திக்கிறார்., கலங்குகிறார்., தடுமாறுகிறார். பல்வேறு சிந்தனைகள் அவரை ஆட்கொள்கிறது! அதற்குத் தக்கவாறு அவரது முகத்தில் பல்வேறு நிலைமாற்றங்கள் - பாவனைகள் ஏற்படுகின்றன! ஆனால் எதையும் வெளிக்காட்டிக்கொள்ளாமல் சமாளிக்கிறார் ... )

ரோமப்பேரரசர் ஹெர்குலிஸ், தாம் மேற்கொண்ட விசாரணைக்குப் பிறகு முஹம்மத் நபி பற்றி நல்ல கருத்துளைக் கூறியதும் நபியவர்களிடம் இருந்து வந்த மடலை மரியாதையோடு பெற்று கண்களில் ஒத்திக் கொண்டு படித்துக்காட்டியதும் ...

இந்தக் காட்சிகளைக் கண்ட அரசவைப் பிரதானிகளும் கிறிஸ் தவ மதகுருமார்களும் - அங்கு கூடியிருந்த அனைவரும் கூச்சலிட ஆரம்பித்து விட்டார்கள். எங்கும் ஒரே இரைச்சல்! ஒரே குழப்பம்! சப்தங்கள் அதிகமாகிக் கொண்டே சென்றன.

அந்த கபளீகரத்தில் அபூ சுப்யானையும் அவருடன் வந்தவர்களை யும் அதிகாரிகள் பத்திரமாக அங்கிருந்து வெளியேற்றினார்கள்.

அபூ சுப்யான்: (தன்னுடன் வந்தவர்களிடம் சொல்கிறார்) ரோமப் பேரர சரே பயப்படும் அளவுக்கு முஹம்மதின் காரியம் மேலோங்கிச் சென்று கொண்டிருக்கிறது!! (அப்போதிருந்தே நபியவர்கள்தான் வெற்றி அடைவார்கள் என்ற நம்பிக்கையில் திளைத்தவனாகவே நான் இருந்தேன். இறுதியில் அல்லாஹ் என்னுள்ளேயும் சத்திய மாாக்கம் இஸ்லாத்தை நுழைத்துவிட்டான்) [↓]

ரோமப் பேரரசர் ஹெர்குளிஸ் உடனே தனது உதவியாளரை அழைத்து ஒருமடல் எழுதச் சொல்கிறார். அதனை, அன்றைய கிறிஸ்தவ உலகிற்குப் போப்பாண்டவராகப் பொறுப்பு வகித்துக் கொண்டிருந்த தனது நண்பர் **ளஃகாத்திர்** அவர்களிரிடம் ஒப்படைக்கும்படி ரோம் நகருக்கு அனுப்பி வைக்கிறார். அதனுடன் நபியவர்கள் எழுதி அனுப்பிய மடலையும் கொடுத்து அனுப்புகிறார்.

பிறகு மன்னர், பாலஸ்தீனத்தின் முக்கிய தலைநகராகத் திகழ்ந்த ஹிம்ஸு க்குப் புறப்பட்டுச் சென்றார்.

(திரை விழுகிறது)

# காட்சி 14

## பங்குபெறுவோர்

**போப்பாண்டவர் ளஃகாத்திர், கிறிஸ்தவப் பாதிரிகள், பொதுமக்கள் பலர்.**

**(பின்னணிக் குரல்: ரோமப்பேரரசர் ஹெர்குலிஸ் அனுப்பி வைத்த பணியாள் மேன்மைக்குரிய போப்பாண்டவர் ளஃகாத்திர் அவர்கள் வசம் மடலை ஒப்படைக்கிறார். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கொடுத்து அனுப்பிய அழைப்பு மடலும் அத்துடன் இருந்தது)**

போப்பாண்டவர் அந்த மடல்களை மிகுந்த கண்ணியத்துடனும் மரியாதையுடனும் பெற்றுக் கொள்கிறார்.

முதலில் ரோமப் பேரரசரின் மடலைப் பிரித்து வாசிக்கிறார். அதில் எழுதப்பட்டிருந்தது:

கிறிஸ்தவ மதத்தின் மாபெரும் ஆன்மீகத் தலைவரும் என் அன்புக்குரிய நண்பருமான மரியாதைக்குரிய ஸஃகாத்திர் அவர்களின் மேலான சமூகத்திற்கு!

**கர்த்தரின்** அன்பும் ஆசியும் தங்களையும் எம்மையும் அரவணைத்துக் கொள்ளட்டுமாக!

நமது மதத்தின் வேத நூல்களில் - கடைசி காலத்தில் ஒரு தீர்க்கதரிசி தோன்றுவார் என்பது பற்றி முன்னறிவிப்பு செய்யப்பட்டிருப்பதை என்னை விட தாங்கள் நன்கு அறிவீர்கள். இப்போது மக்கா என்கிற அரபுப் பகுதியில் ஒரு நபி - தீர்க்கதரிசி தோன்றியுள்ளார். அந்தச் செய்தியை நீங்களும் அறிந்திருப்பீர்கள். நமது வேதங்களின் முன்னறிவிப்பு இந்த புதிய நபிக்குப் பொருந்துமா? நமது வேத நூல்களில் சொல்லப்பட்ட

---

[↓] **ஹிஜ்ரி 8 ஆம் ஆண்டு மக்கா வெற்றி கொள்ளப்பட்டபோது அபூ சுப்யான் இஸ்லாத்தை ஏற்றார்.**

தீர்க்கதரிசிதான் இவரா? வேதக்காரர்களாகிய நாமும் நமது கிறிஸ்தவ மதத்தைச் சேர்ந்த நம்முடைய மக்கள் அனைவரும் இந்த நபியைத்தான் பின்பற்ற வேண்டுமா? அப்படிப் பின்பற்றினால்தான் கர்த்தரின் கருணையை நாம் பெற முடியுமா?

இந்த விஷயத்தில் நான் பெரும் **குழப்பத்தில்** இருக்கிறேன். எனவே தாங்களிடம் இருந்து தங்களின் மேலான வழிகாட்டலை - தெளிவான பதிலை எதிர்பார்க்கிறேன். இது பற்றி தங்களின் அபிப் பிராயம் என்ன என்பதற்கு உடனே தெளிவான பதில் தருமாறு பணிந்து கேட்டுக்கொள்கிறேன்.

**இப்படிக்கு**
**ரோமப் பேரரசர் ஹெர்குளிஸ்**

(அதன் பிறகு போப்பாண்டவர் ளஃகாத்திர் அவர்கள், அண்ணல் நபியவர்களின் மடலைப் பிரித்து வாசிக்கி றார்)

இரண்டு மடல்ளையும் படித்து முடித்ததும் ஆழ்ந்த சிந்தனை யில் மூழ்கிவிடுகிறார் ...! சிறிது நேரத்தில் **தெளிவானதொரு முடிவுக்கு** வருகிறார். நபிகளார் பற்றி நல்ல அபிப்பிராயம் அவரது உள்ளத்தில் உதிக்கிறது. உடனே **போப்பாண்டவர் ளஃகாத்திர்** அவர்கள், போப்புக்குரிய சிறப்பு உடைகளை அணிந்துகொண்டு மக்கள் முன்னிலையில் தோன்றுகிறார். மகிழ்ச்சியுடனும் குதூகலத்துடனும் எல்லா மக்களுக்கும் ஓர் அறிவிப்பை வெளி யிடுகிறார்)

**போப்பாண்டவர் ளஃகாத்திர்:** என் அன்புக்குரிய கிறிஸ்தவப் பெரு மக்களே! கர்த்தரின் கருணையும் ஆசியும் நம் அனைவர் மீதும் பொழியட்டுமாக! நாம் அனைவரும் இதுவரையில் எதிர்பார்த்திருந்த- நமது வேதங்களில் முன்னறிவிப்புச் செய்யப்பட்டுள்ள தீர்க்கதரிசி இதோ! தோன்றி விட்டார்., இறுதி காலத்து இறைத்தூதர் - கர்த்தர் அனுப்பிவைத்த தீர்க்கதரிசி -இதோ! மக்க மாநகரில் உதித்து விட்டார். நானும் நீங்களும் எல்லோரும் இந்த நபியை ஏற்றுக் கொள்ள வேண்டும். இவர் மீது விசுவாசம் கொள்ள வேண்டும். அன்பு செலுத்த வேண்டும். அப்பொழுதுதான் மரணத்திற்குப் பின் வர உள்ள மறுவுலகத்தில் நாம் அனைவரும் ஈடேற்றம் பெற முடியும்!

(போப்பாண்டவர் ளஃகாத்திர் எதிர்பார்த்தது ஒன்று. நடந்தது வேறொன்று! அதாவது, நமது கிறிஸ்தவ மக்கள் நம்மீது மிகுந்த மரியாதை வைத்திருக்கிறார்கள்., நாம் எந்த ஒரு முடிவை அறிவித்தாலும் -நாம் வெளியிடும் நல்ல கருத்துகள் அனைத்தையும் எற்றுக் கொள்வார்கள் என்று எதிர்பார்த்தார். ஆனால் அந்த மக்களின் அறிவுக் கண்களை மதவெறி மறைத்து விட்டது. போப்பாண்டவரைப் போற்றி உயர்வாக மதித்து அவர் காட்டும் நேர்வழியைப் பின்பற்றி வாழ்வதற்கு மாறாக அந்த மக்கள் அவரையே ஏச ஆரம்பித்து விட்டார்கள். அதாவது, அவர் வெளியிட்ட அறிவிப்பைக் கேட்டதும் முக்கடவுள் சிந்தனை உடைய பாதிரிகளும் ஏனைய கிறிஸ் தவ பொதுமக்களும் தங்கள் மதத்தலைவராகிய போப்பாண்டவரையே வாய்க்கு வந்தபடி திட்டுகிறார்கள்., ஏசுகிறார்கள்!

அதனைக் கண்னுற்ற போப்பாண்டவர் ளஃகாத்திர் அதிர்ச்சி அடைகிறார்! எங்கு நோக்கினும் ஒரே இரைச் சலும் பெரும் குழப்பமும் நிறைந்திருந்தன! மக்களைச் சமாதானப்படுத்த எவ்வளவோ முயற்சி செய்கிறார்! எந்தப் பயனுமில்லை! மக்களின் கடுமையான பிடிவாதம் மற்றும் காழ்ப்புணர்ச்சிக்கு எதிரில் எதுவும் செய்ய முடியவில்லை! நிலைமை கை மீறிப்போவதை உணர்கிறார்!

உடனே ரோமப் பேரரசரிடம் இருந்து மடல் கொண்டுவந்த அந்த ஆளை அழைத்தார். அவசர அவசரமாக பதில் மடல் எழுதி ஹெர்குலிஸ் மன்னருக்குக் கொடுத்து அனுப்புகிறார். அதில் -

**மக்காவில் இப்போது தோன்றியுள்ள நபி, நாம் எதிர்பார்த்துக் கொண்டிருந்த தீர்க்கதரிசிதான், மேலும் நம்முடைய ஏசுநாதர் (ஈசா நபி) முன்னறிவிப்பு செய்ததும் இவரைப் பற்றித்தான்! எனவே நான் இந்த நபியை உளப்பூர்வமாக ஏற்றுக்கொள்கிறேன். அவரைப் பின்பற்றி வாழ்வதற்கு உறுதிகொள்கிறேன். நீங்களும் இந்த நபியை ஏற்று விசுவாசம் கொள்ளுமாறு உரிமையுடன் கேட்டுக்கொள்கிறேன்** என்று குறிப்பிட்டிருந்தார்.

**அத்துடன் நபி (ஸல்) அவர்களுக்கும் ஒரு மடல் எழுதி அதே ஆளிடம் கொடுத்து அனுப்புகிறார். அதில் -**

**இறைத்தூதர் முஹம்மது நபியவர்களின் மேலான சமூகத்திற்கு ... கர்த்தரின் கருணையும் சாந்தியும் நம் அனைவர் மீது நிலவட்டுமாக! தாங்கள் கொண்டு வந்துள்ள சத்திய சன்மார்க்கத்தை நான் உளப்பூர்வமாக ஏற்றுக் கொள்கிறேன். தாங்கள் மீது உண்மையாக விசுவாசம் கொள்கிறேன். லா இலாஹ இல்லல்லாஹு - வணக்கத்திற்கு உரிய இறைவன் அல்லாஹ்வைத் தவிர வேறுயாருமில்லை என்கிற உண்மைக் கொள்கையை நாவால் மொழிந்து உளப்பூர்வமாக விசவாசம் கொண்டு என்னை நான் இஸ்லாத்தில் இணைத்துக் கொள்கி றேன்.**

ஆனாலும் மன வேதனைக்குரிய செய்தி என்னவெனில், நீங்கள் கொண்டு வந்த தூதுத்துவத்தை - புதிய மார்க்கத்தின் செய்தியை எனது மக்களிடம் நான் எடுத்துரைத்தபொழுது - ஏக இறைவன் ஒருவனையே

வணங்கிட வேண்டும்., புதிய நபியின் வருகையை ஏற்றுக் கொள்ள வேண்டும் என எல்லோருக்கும் அறிவித்தபோது யாரும் அதனை ஏற்றுக்கொள்ளத் தயாராக இல்லை! என்று குறிப் பிட்டிருந்தார்.

(பிறகு முக்கடவுள் கொள்கையில் முரட்டுப் பிடிவாதமாக இருந்த பாதிரிகளும் கிறிஸ்த பொதுமக்களும் போப்பாண்டவர் ளஃகாத்திர் மீது வரம்புமீறிய கொடுமையை கட்டவிழ்த்து விட்டு அடித்துத் துன்புறுத்தி அநியாயமாக அவரைக் கொன்றுவிடுகிறார்கள். மிகுந்த அதிர்ச்சிக்கும் மன வேதனைக்கும் உரிய அந்தச் செய்தி நாடு நகரம் எங்கும் தீயெனப் பரவுகிறது. ரோமப் பேரரசர் ஹெர்குலிஸ் காதுகளுக்கும் அந்தச் செய்தி எட்டுகிறது!) (திரை விழுகிறது)

## காட்சி 15

### பங்குபெறுவோர்

**ஹெர்குலிஸ் மன்னர், அரசவைப் பிரதானிகள், அமைச்சர்கள், கிறிஸ்தவப் பாதிரிகள், பொதுமக்கள்**

**(பின்னணிக் குரல்: ஹெர்குலிஸ் மன்னர் ஹிம்ஸ் மாநகரம் போய்ச் சேர்ந்தபோது மேன்மைக்குரிய போப்பாண்டவர் ளஃகாத்திர் அவர்கள் கொடுத்தனுப்பிய மடல் அவர் கைக்குக் கிடைத்தது. அதில் போப்பாண்டவர் தெரிவித்திருந்த எல்லா விவரங்களையும் ஹெர்குலிஸ் மன்னர் நிதானமாக ஆழ்ந்து படித்துத் தெரிந்து கொண்ட பிறகு ...)**

**மன்னர்: (அதிகாரிகளை அழைத்து) கிறிஸ்தவ பாதிரிமார்கள், அரசவைப் பிரமுகர்கள் அனைவரையும் ஹிம்ஸ் மாநகரத்தில் உள்ள கோட்டைக்கு வருமாறு அழையுங்கள். அப்படி அவர்கள் அனை வரும் கோட்டையினுள் வந்து அமர்ந்ததும் கோட்டையின் எல்லா வாயில்களை அடைத்து விடுங்கள்.**

**(அவ்வாறே பாதிரிமார்களும் அரசாங்கப் பிரமுகர்கள் அனைவருக் கும் அழைப்பு அனுப்பப்பட்டு அனைவரும் ஹிம்ஸ் மாநகரக் கோட் டைக்கு வருகிறார்கள். அவரவர் இருக்கைகளில் அமர்கிறார்கள். பிறகு கோட்டையின் அனைத்து வாசல்கள் அடைக்கப்படுகின்றன. பின்னர் பாதிரிமார்களும் அரசவைப் பிரமுகர்களும் நிறைந்திருந்த பெரும் திரளான கூட்டத்தின் முன்னிலையில் மன்னர் ஹெர்குலிஸ் தோன்றுகிறார் ....)**

**மன்னர்:** ரோம் நாட்டு மக்களே! பாதிரிமார்களே! என் மீது அன்பும் பாசமும் வைத்துள்ள அரசவைப் பிரமுகர்களே! நீங்கள் வெற்றியும் நேர்வழியும் பெற வேண்டும் என்று விரும்பினால், இந்த மண்ணில் உங்கள் ஆட்சி நிலைத்திருக்க வேண்டும் என்பதில் உங்களுக்கு உண்மையான அக்கரை இருந்தால் ... நான் சொல்வதுபடி செய்யுங்கள். இன்றைய இறுதிக் காலகட்டத்தில் மக்க மாநகரத்தில் புதிதாகத் தோன்றியுள்ள இந்த இறைத்தூதரை - கர்த்தர் அனுப்பி வைத்த தீர்க்க தரிசியை - அவர்தான் முஹம்மது நபி - அவர்களை ஏற்றுக் கொள்ளுங்கள் ...!

(இதைக்கேட்டவுடன்) அங்கு கூடியிருந்த பாதிரிமார்களும் முக்கிய பிரமுகர்களும் - அனைவரும் காட்டுக் கழுதைகள் விரண்டோடு வதைப்போல் கோட்டை வாயில்களை நோக்கி விரண்டோடுகிறார்கள். ஆனால் வாசல் கள் அனைத்தும் தாழிடப்பட்டிருந்தன.

அவர்கள் வெருண்டோடியதை ஹெர்குலிஸ் மன்னர் பார்த்தும் திடுக்கிடுகிறார்! பிடிவாத்திலும் மத மாச்சரி யத்திலும் எல்லோரும் ஊறித் திளைத்திருந்தது பற்றி திகைப்பும் ஆச்சரியமும் அடைகிறார்! இவர்கள் எங்கே இறுதித் தூதர் முஹம்மது நபி மீது நம்பிக்கை கொள்ளப்போகிறார்கள் என்று அவ்விஷயத்தில் மன்னருக்கு பெரும் நிராசை ஏற்படுகிறது! ... உடனே சுதாரித்துக் கொள்கிறார்!

**மன்னர்:** (காவலர்களை நோக்கி கட்டளையிடுகிறார்) எல்லாப் பாதிரிமார்களையும் அரசவைப் பிரதானிகளையும் மீண்டும் அழைத்து வந்து தர்பாரில் அமரவையுங்கள்.

(அவ்வாறே அதிகாரிகள் வாசலை நோக்கி ஓடிய கூட்டத்தை அமைதிப்படுத்தி அனைவரையும் திரும்பி அழைத்து வருகிறார்கள்)

**மன்னர்:** ஏன் இப்படி அவசரப்படுகிறீர்கள்? நமது கிறிஸ்தவ மதத்தில் நீங்கள் எவ்வளவு உறுதியுடன் இருக்கிறீர்கள் என்பதைச் சோதித்துப் பார்ப்பதற்காகவே நான் இவ்வாறு கூறினேன். மதம் மாறிடவில்லை. நமத கிறிஸ்தவ மதத்தைக் கைவிட்டுவிடவில்லை. இப்போது நமது மதத்தின் மீது எத்தகைய உண்மையான பற்றும் பாசமும் உங்கள் உள்ளத்தில் நிறைந்துள்ளது என்பதைத் தெளிவாக அறிந்து கொண்டேன்.

**(ரோமப் பேரரசர், இப்படி தலைகீழ் பல்டி அடித்து கோழைத்தனமானதொரு தன்னிலை விளக்கம் அளித்த பொழுது அனைவரும் அவர் முன்னிலையில் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து வணங்குகிறார்கள். தங்களின் வைத்திருந்த அடிமை விசுவாசத்தை அவர் முன்னிலையில் வெளிப்படுத்துகிறார்கள்)**

**ரோமப்பேரரசர் ஹெர்குலிஸ்:** (மனதிற்குள் சொல்லிக் கொள்கிறார்) நல்ல வேளை தப்பித்தோம்! நமது நண்பர் போப்பாண்டவர் ளஃகாத்திர் அவர்களுக்கு ஏற்பட்ட கதிதான் நமக்குமோ என்று பயந்தே போய் விட்டேன் ...!

**(பின்னணிக் குரல்: அந்தோ! ரோமப்பேரரசரின் பரிதாபம்! உலகின் அழியும் சுகபோகங்களையே பெரிதெனக் கருதி, அழியா நிலைபேறு டைய மறுமைப் பாக்கியங்களைப் அலட்சியப்படுத்தி விட்டார்.**

**அற்ப ஆயுள் கொண்ட இவ்வுலகத்தின் சுகபோக வாழ்வையும் ஆட்சி அதிகாரத்தையும் பதவி சுகத்தையும் பெரிதென நம்பி மோசம் போய்விட்டார்! மறுவுலக வாழ்வில் கிடைக்கும் நிரந்தரமான சுவனத்து இன்ப நுகர்ச்சிகளை இழந்து விட்டார்!**

**அந்தோ! மன்னர் ஹெர்குலிஸு க்கு நேர்ந்த துர்ப்பாக்கியத்தை என்னவென்பது!**

**உண்மையைத் தேடி நெடியதொரு பயணத்தை அவர் மேற் கொண்டார். அந்தப் பயணத்தில் சத்தியம் இதுதான் என்று தெளி வாகப் புலப்பட்டது. அதன் பிறகு இப்படிப்பட்ட தலைகீழ் முடிவுக்கு ஏன் வந்தார்? ஏன் இப்படித் தவறான முடிவை எடுத்தார்?**

**பதவிச் சுகமும் உலகின் இன்ப நுகர்ச்சியும்தான் அதற்குக் காரணம் என்று சொல்வதைத் தவிர வேறு என்ன இருக்கிறது!**

**மேன்மைக்குரிய போப்பாண்டவர் ளஃகாத்திர் அவர்களுக்கு நேர்ந்த சோக முடிவு பற்றிய செய்தி கிடைத்தபோது ஹெர்குலிஸ் மிகவும் அஞ்சி நடுநடுங்கிய வண்ணம் உதிர்த்த வார்த்தைகளே அதற்கு சான்று., அவரது தன்னிலை விளக்கம் இதுதான்:**

**இந்தப் பாமர மக்கள் என்னைக் கொன்று விடுவார்களோ என்று அஞ்சுகிறேன். இதோ! போப்பாண்டவர் ளஃகாத்திர் அவர்கள் மக்க ளிடத்தில் எவ்வளவு அதிகச் செல்வாக்குப் பெற்றிருந்தார்! என்னை விட எவ்வளவு உயர்ந்த மதிப்பு,மக்களிடத்தில் அவருக்கு! அப்பேர்ப் பட்ட போப்பாண்டவருக்கே இந்த கதி என்றால் நாம் எம்மாத்திரம்!**

சத்தியம் இதுதான் என்று தெள்ளத்தெளிவாகப் புலப்பட்ட பிறகும் **உண்மைக் கொள்கையிலேயே உயிருள்ள வரை நிலைத்து நிற்பேன்., உண்மையை விட்டுவிடும்படி யார் சொன்னாலும் ஏற்க மாட்டேன்., அவ்வழியில் எவ்வளவு இழப்பு நேரிட்டாலும் சரியே!** என்று உறுதி பூணாமால் உண்மையை - நீதி நியாயத்தை அவ்வளவு அலட்சியமாக உதறித்து விட்டாரே ரோமப் பேரரசர் ஹெர்குலிஸ்! என்னே அவரது பரிதாபம்!

திருக் குர்ஆனில் இறைவன் கூறுகிறான்:

قال الله تعالى : يا ايها الناس اتقوا ربكم واخشوا يوما لا يجزى والد عن ولده ولا مولود هو جاز عن والده شيئا ، ان وعد الله حق فلا تغرنكم الحياة الدنيا ولا يغرنكم بالله الغرور (سورة لقمان الآية : ٣٣)

ஓ! மனிதர்களே! உங்கள் இறைவனின் கோபத்தில் இருந்து உங்களைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள். மேலும் அந்த ஒரு நாளைக் குறித்து அஞ்சுங்கள். அது எப்படிப்பட்ட நாள் எனில், அன்று எந்தத் தந்தையும் தன் மகனுக்காக எந்த உதவியும் செய்ய முடியாது. எந்த மகனும் தன் தந்தைக்காக எந்த உதவியும் செய்ய முடியாது. (அப்படிப்பட்ட மறுமை நாள் வருவது பற்றிய) அல்லாஹ்வின் வாக்குறுதி நிச்சயம் உண்மையானதே! எனவே <u>*இவ்வுலக வாழ்க்கை உங்களை ஏமாற்றத்தில் ஆழ்த்திட வேண்டாம்.*</u> மேலும் எந்த ஏமாற்றுக்காரனும் அல்லாஹ்வின் விஷயத்தில் உங்களை ஏமாற்றிட வேண்டாம் (31 : 33)

- முற்றும் -

## (அபீசீனியாவின் மன்னர் நஜாஷி பாதுஷாவுக்கு நபி (ஸல்) அவர்கள் அனுப்பிவைத்த அழைப்பு மடலின் பின்னணியில் ...)

## காட்சி 16

## பங்கு பெறுவோர்

**ஹபஷா நாட்டு மன்னர் அப்ஜர், அரசவைப் பிரமுகர்கள், அமைச்சர்கள், மன்னரின் புதல்வர் அஸ்ஹமா ஆகியோர்.**

**(பின்னணிக் குரல்: ஹபஷா என்பது வடகிழக்கு ஆப்ரிக்காவில் உள்ள ஒரு நாடு. இன்று சோமாலியா, எத்தியோப்பியா, அரீத்ரியா என்று அறியப்படுகின்ற மூன்று நாடுகளும் ஹபஷா என்ற ஒரே தேசமாக அன்று இருந்தது.**

**ஹபஷாவின் மன்னராக பதவியேற்கும் ஒவ்வொருவரையும் நஜாஷி என்றழைப்பது அந்நாட்டு மக்களின் பழக்கம். அண்ணல் நபி (ஸல்) அவர்கள், அம்ர் பின் உமைய்யா ளம்ரி எனும் தோழர் மூலம் எந்த மன்னருக்கு அழைப்பு மடல் கொடுத்தனுப்பினார்களோ அந்த மன்னர் பெயர் அஸ்ஹமா பின் அப்ஜர். அவரும் நஜாஷி என்றே அழைக் கப்படுகிறார்.**

**அஸ்ஹமாவின் தந்தை அப்ஜர் ஹபஷா நாட்டின் மன்னராக இருந்தபோது, சதிகாரர்கள் சிலர், தந்தைக் கும் மகனுக்கும் பெரும் துரோகம் செய்தனர் ... அது ஒரு வேதனைக்குரிய விஷயம்! அஸ்ஹ மாவின் வாழ்க்கையில் ஒரு சோதனைக்குரிய காலகட்டம்!**

**ஆம்! சதிகாரர்கள் சிலர், அஸ்ஹமாவை பிடித்துச்சென்று அடிமைச் சந்தையில் விற்று விடுகிறார்கள். அதனால் அவர், சுவூதி அரேபியாவில் பத்ரு யுத்தம் நடைபெற்ற பகுதியை அடுத்துள்ள மாகாணத்தில் ஆடு மேய்க்கும் இடையராகக் கொத்தடிமை செய்து பிழைக்கும் இழிநிலைக்குத் தள்ளப்பட்டார் ...**

**ஏன் இப்படியெல்லாம் நடந்தது? அதற்கு என்ன காரணம்? சீறா எனும் நபிவரலாற்று ஏடுகளில் பதிவாகியுள்ள இப்படிப்பட்ட சில அரிய தகவல்கள்தான் இதோ! காட்சிச் சித்திரங்களாக உங்கள் கண்கள் முன்னே...)**

ஹபஷா நாட்டின் அரியணையில் அப்ஜர் மன்னர் அமர்ந்திருக்கிறார். அவரது ஆட்சியின் கீழ் மக்கள் நிம்மதி யாக - செல்வச் செழிப்புடன் வாழ்ந்து வருகிறார்கள். ஒரு நாள் தர்பாரில் அமைச்சர்களிடமும் அரசவைப் பிரதானிகளிடமும் மகிழ்ச்சியுடன் உரையாடிக் கொண்டிருக்கிறார் மன்னர். மக்களின் வாழ்க்கை நிலைபற்றியும் நாட்டு நிலவரங்கள் பற்றியும் விசாரிக்கிறார்.

**நஜாஷி:** அமைச்சர் பெருமக்களே! அரசவைப் பிரதானிகளே! நமது நாட்டு மக்களின் நிலைமை என்ன? எப்படி இருக்கிறார்கள்? மக்களுக்கு ஏதேனும் பிரச்னைகள் உண்டா? கஷ்ட நஷ்டங்களுக்கு உள்ளாகியிருப்பதாக யாரேனும் முறையிடுகிறார்களா? ... மக்களின் மனநிலை என்ன? கருத்துகள் என்ன? எதுவாக இருந்தாலும் என்னிடம் சொல்லுங்கள்! அதிலும் குறிப்பாக, எங்களது அரச குடும்பத்தின் பரம்பரை ஆட்சி பற்றி மக்கள் என்ன பேசிக்கொள்கிறார்கள்?

**பிரதானிகளில் ஒருவர்:** மன்னர் அவர்களே! நாட்டு மக்கள் அனைவரும் உங்களையும் உங்களது ஆட்சியையும் புகழ்ந்து கொண்டுதான் இருக்கிறார்கள்... எல்லோரும் நிம்மதியாக வாழ்கிறோம். மன்னர் அவர்களே! நீங்கள் இருக்கும்போது இந்நாட்டு மக்களுக்கு என்ன கவலை? என்ன கஷ்டம்? அரச தர்பாரில் அமைந்துள்ள இந்த சிம்மாசனத்தில் உங்கள் குடும்பத்தில் இருந்து யாரேனும் ஒருவர் அரசராக அமர்ந்து அலங்கரித்துக்கொண்டி ருக்க வேண்டும் என்பதுதான் இந்நாட்டில் வாழும் நல்லோர் அனைவரின் விருப்பம்! எங்கள் எல்லோருடைய அசையும் ஆவலும் அதுதான்!

அப்படி இந்த சிம்மாசனத்தில் அமர்ந்து அலங்காரம் செய்வதற்கு இப்பொழுது நீங்கள் இருக்கிறீர்கள்! எதிர்காலத்தில் உங்கள் சந்ததிகள் வருவார்கள்! மன்னர் அவர்களே!இதுவே போதும் இந்நாட்டு மக்களுக்கு! வேறு என்ன வேண்டும்?

**மந்திரிமார்களும் பிரதானிகளும்:** ஆமாம்! ஆமாம்! இந்த சிம்மாசனத்தை அலங்கரிப்பவர்தான் எங்கள் இதய சிம்மாசனத்தையும் அலங்கரிப்பவர். எங்கள் நாட்டு மன்னரின் நற்பாக்கியத்தால்தான் மக்கள் அனைவரும் செல்வமும் வளமும் பெற்று, இன்பமும் மகிழ் வும் என்றும் பொங்கிட நிம்மதியாக வாழ்கிறார்கள்! இனி மேலும் எல்லாக் காலமும் நிம்மதியாக வாழ்வார்கள்!!

மன்னர் அவர்களே! உங்களது பாக்கியம் நிறைந்த பொன்னான ஆட்சியின் கீழ் இதோ! எங்கள் வாழ்வில் மகிழ்ச்சியும் நிம்மதியும் கொட்டிக் கிடக்கிறது. எங்கு நோக்கினும் வளமும் செழிப்பும் கரை புரண்டோடுகிறது. அனைத்திற்கும் மேலாக - மன்னர் பெருமகனே! நாங்கள் தினமும் இங்கு வந்து உங்கள் அழகு தர்பாரையும் அலங்கார அரியாசனத்தையும் பார்த்துப்பார்த்து மகிழ்ந்து கொண்டி ருக்கிறோமே இதுவே எங்களுக்குப் பெரும் பாக்கியம் அன்றோ!

**நஜாஷி:** உங்களது பாராட்டுக்கும் வாழ்த்துக்கும் ரொம்ப நன்றி! உங்கள் உள்ளத்தில் நிலைகொண்டிருக்கும் நல்லெண்ணத்தைப் போலவே கர்த்தரும் எங்கள் குடும்பத்திற்கு மென்மேலும் நல்லுதவி புரிந்து கொண்டி ருக்கிறார் என்றுதான் சொல்ல வேண்டும். எங்கள் சந்ததிகளே தொடர்ந்து காலாகாலமாக இந்நாட்டை ஆள வேண்டும் என்றுதான் அவரும் பெரிதும் விரும்புகிறார்.

குழந்தைப் பேறு இல்லையே, என்ன ஆகுமோ என்று ரொம்ப காலமாக கவலைப்பட்டுக் கொண்டிருந் தேன்.,எங்கள் அரச குடும்பத்தின் விஷயத்தில் விதியின் இந்த விபரீத விளையாட்டை எண்ணி மனம் நொந்து வாடிக்கொண்டிருந்தேன். இதோ! பாருங்கள்! கர்த்தர் இப்பொழுது எங்களைக் கண்திறந்து பார்த்து விட்டார். கருணை பொழிந்து விட்டார்.

எங்கள் குலச்சிறப்பை நிலைநிறுத்தும் வகையில் குடும்பத்தின் தவப்புதல்வராக - குலக்கொழுந்தாக **அஸ்ஹமா** பிறந்து விட்டார். எங்கள் கவலையெல்லாம் மறைந்து விட்டது. எங்களுடைய தவப்புதல்வர் நல்ல அறிவு தீட்சண்யத்துடன் - நிர்வாகத் திறமையுடன் வளர்ந்து வருகிறார். நாமெல்லாம் கர்த்தருக்கு எவ்வளவோ நன்றிக் கடன்பட்டுள்ளோம்!

**பிரதானிகளில் ஒருவர்:** எல்லாம் சரிதான்! பிற்காலத்தில் தாங் களின் தவப்புதல்வர் அஸ்ஹமாவுக்கு ஆண் வாரிசு இல்லையெனில் என்ன செய்வது? வாரிசு தட்டுப்பாடு ஏற்பட்டுவிடாதா? பிறகு அந்த நேரத்தில் என்னென்ன சிக்கல்கள் ஏற்படுமோ! கடவுளுக்குத்தான் தெரியும்! கர்த்தருக்குத்தான் வெளிச்சம்!

**மற்றொருவர்:** ஏன் வீணாக அலட்டிக் கொள்கிறீர்? நம் மன்னரின் சகோதரருக்குத்தான் ஆண் வாரிசுகள் இருக்கிறார்களே! ஒருவரா, இருவரா? பன்னிரண்டு பேர் இருக்கிறார்கள்! அவர்களில் ஒருவருக்கு முடிசூட்டி அழகு பார்க்க வேண்டியதுதான்! அகமகிழ வேண்டியதுதான்! அந்தப் பாக்கியம் பன்னிரண்டு தலைமுறைக்கு நீடித்துக் கொண்டிருக்குமே!

**முதலாமவர்:** அதெல்லாம் சரிதான்! எதிர்காலத்தில் - அப்படி ஒருசூழ்நிலை வரும்பொழுது அந்த ஆண்பிள்ளை களுக்கு மத்தியில் சண்டை தகராறுகள் ஏற்பட்டு...அது பெரும் பிரச்னையாக வெடித்துக் கிளம்பி தீர்க்க முடியாத பகையாகித் தீராத் துன்பமானால் என்ன செய்வார்கள்? எனவே அறிவுத்திறனும் தூரநொக்கும் உடைய நம்முடைய மன்னரே இப்போதே அதற்கோர் ஏற்பாட்டைச் செய்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்!

**நஜாஷி:** நீர் என்ன சொல்ல வருகிறீர்? தெளிவாகச் சொல்லும்!

**முதலாமவர்:** நான் என்ன சொல்கிறேன் என்றால், மன்னர் அவர்களே! இப்போதே நீங்களே அதற்கான வழி வகையைச் செய்தால் நல்லது. அதாவது, தாங்களே முன்னின்று தங்கள் சகோதரருக்கு முடிசூட்டி வைத்தால் நன்றாக இருக்குமே! பிற்காலத்தில் ஆண் வாரிசு இல்லாமல் - முடிசூட்டுவதற்கு வழிவகை காணாமல் இடைவெளி ஏற்படாதிருக்க நல்லதோர் ஏற்பாட்டை தாங்களே செய்யலாமே என்றுதான் சொல்ல வந்தேன்! வேறொன்றுமில்லை!

**நஜாஷி:** (சற்று கோபம் அடைந்தவராக) இப்போதே சண்டையை ஆரம்பத்துவிடலாம் என்று சொல்கிறீர், அப்படித்தானே! என்னுடைய சகோதரர் என்னுடன் எவ்வளவு பாசமாகவும் நிர்வாகத்தில் என்னு டன் பெரிதும் ஒத்துழைப்பாகவும் இருந்து கொண்டிருக்கிறார்., இத்தகைய இணக்கமான நல்ல சூழ்நிலையைக் கெடுப்பதற் குத்தான் நீர் இப்படிப்பட்ட **நல்லாலோசனை** சொல்கிறீரா? சொல்லும் சொல்லும், உம்மால் முடிந்ததைச் செய்யும்!

**மந்திரிகளும் பிரதானிகளும்:** (சற்று அதிர்ச்சி அடைந்தவர்களாக) இதுவெல்லாம் வீண்கற்பனை! இதுபோன்ற கற்பனைகள் நமக்கு வேண்டாம்! இதுவா இப்போதைக்குத் தீர்த்து வைக்க வேண்டிய சிக்கலான பிரச்னை? ஒருதலைமுறைக்குப் பின்னால் என்ன நடக்கும் என்பது பற்றி இப்போதே வீணாகக் கற்பனை செய்வதற்கு - என்ன தேவை வந்தது? நம் மன்னரின் வாரிசுகளே இந்நாட்டின் அரியாசனததில் - ஆட்சிபீடத்தில் தொடர்ந்து நீடிப்பார்கள்., அதற்கு எந்தத் தடையும் வராது! என்ன நடக்குமோ? ஏது நடக்குமோ என்று ஏன் அஞ்சு கிறீர்கள்! இப்போதே ஏன் வீண் கற்பனைகள் செய்கிறீர்கள்?

(அதற்குள் நஜாஷியின் புதல்வர் அஸ்ஹமா அங்கு வருகிறார். தந்தைக்கு அருகில் வந்து இருவரும் ஏதேதோ சொல்கிறார். உடனே தந்தையும் தனயனும் வெளியே கிளம்பிக் போகிறார்கள்)

**பிரதானிகளில் ஒருவர்:** மன்னரிடம் இன்று தேவையில்லாமல், வீணா கப் பல விஷயங்களைப் பேசி விட்டார்கள்!

**மற்றொருவர்:** எப்பபொழுதும் தமது புதல்வர் அஸ்ஹமாவை அருகில் இருக்கச் செய்து இருவரும் நம்முடன் சந்தோஷமாகப் பேசிக் கொண்டிருப்பார்கள். இன்று பாருங்கள்! விருட்டென்று தந்தையும் தனையனும் எழுந்து போய்விட்டார்கள்!

**வேறொருவர்:** சில விஷயங்களைப் பேசித் தெளிவு பெற வேண்டியதாகத்தான் இருக்கிறது. அதற்காகக் கோபப்படுவதற்கு என்ன இருக்கிறது?

- திரை விழுகிறது -

## காட்சி 17

## பங்கு பெறுவோர்

**ஹபஷாவின் நஜாஷி அஸ்ஹமா, அரசவைப் பிரமுகர்கள், மந்திரி மார்கள், மக்காவில் இருந்து வந்த ஜஅ:.பர் பின் அபீ தாலிப் மற்றும் அவருடைய தோழர்கள்.**

**(பின்னணிக் குரல்: நஜாஷி மன்னர் அப்ஜருக்கு அந்நாட்டில் எதிராகப் பெரும் சதித்திட்டம் தீட்டப்படுகிறது. ஒரு கட்டத்தில் சதி காரர்கள் இரகசியமான முறையில் அவரைக் கொன்று விடுகிறார்கள். அதன் பிறகு அவருடைய சகோதரருக்கு மகுடம் சூட்டி அரியணை யில் அமரச் செய்கிறார்கள்.**

**ஆனாலும் அவருடைய புதல்வர் அஸ்ஹமா பெரிய பிள்ளையாக வளர்ந்து வரவே தனது சிறிய தந்தைக்கு உறுதுணையாக இருந்து அரசு நிர்வாகத்தைக் கவனிக்கலானார்.**

**இவ்வாறு நிர்வாகத் திறன் பெற்று அவர் வளர்ந்து வருவது கண்டு சதிகாரர்கள் அஞ்சினர். ஏதிர்காலத்தில் அவரது கையில் அதிகாரம் சென்றால்,நம் எல்லோரையும் கொலை செய்து பழிதீர்த்து விடுவார். அவரது தந்தையை நாம்தான் கொன்றோம் என்பது அவ ருக்குத் தெரியும்! எனவே பேராபத்து நமது தலைக்கு மேல் தொங்கிக் கொண்டிருக்கிறது என்பதை மறந்து விடாதீர்கள் என்று தமக்குள் பேசிக் கொண்டனர் ...**

**ஒரு நாள் மன்னரிடம் வந்து, அஸ்ஹமாவையும் கொன்றிவிட வேண்டும் என்று மிரட்டினார்கள். எதிர்காலத் தில் முடிசூட வாரிசு இல்லாது போகும் வெற்றிடம் குறித்து நாங்கள் பயந்தோமே அதை நோக்கியே நிலைமை சென்று கொண்டிருக்கிறது. அதை நாங்கள் அனுமதிக்கப் போவதில்லை என்று வீண் வாதம் பேசினார்கள்.**

**ஆனால் மன்னர் அதற்கு உடன்பட மறுக்கவே, அஸ்ஹமாவை நாடுகடத்துகிறார்கள். ஆம்! அரபு நாட்டு வணிகரிடம் அஸ்ஹமாவை 600 திர்ஹத்திற்கு விற்றுவிடுகிறார்கள். அவர் அஸ்ஹமாவை அழைத் துச் சென்று ஆடு மேய்க்கும் வேலையில் ஈடுபடுத்துகிறார். அரேபி யாவில் இன்றைய பத்று மைதானம் அமைந்துள்ள பகுதியில் ஆடு மாடுகளை மேய்க்கிறார் ஹபஷா நாட்டின் இளவரசர்! அப்பொழுது தான் அங்கிருந்த அரபுகளின் வாழக்கைமுறை, குணங்கள், பேச்சுப்பாணி ஆகியவற்றை ஓரளவுக்கு அறிந்து கொள்கிறார்!**

**பிறகு ஹபஷா நாட்டில் ...எதிர்பாராத விதமாக திடீரென ஏற்பட்ட இடி மின்னலின் தாக்குதலில் சிக்கி மன்னர் இறந்து விடுகிறார். நாட்டு மக்களுக்குப் பெரும் அதிர்ச்சி! அவருடைய பிள்ளைகளோ சிறுவர்கள் ...மன்னராக அரியணையில் அமர்த்தப்படுவதற்கு வயதில் லாதவர்கள். பிறகு என்ன செய்வது? உடனே அஸ்ஹமாவைத் தேடிப் பிடித்து அவரிடம் மன்னிப்புக் கேட்டு மன்றாடி அழைத்து வந்து மன்னராக - நஜாஷியாக மகுடம் சூட்டி அரியணையில் அமர்த்துகிறார்கள்!**

**... இந்த காலகட்டத்தில் மக்காவில் குறைஷித் தலைவர்களால் இழைக்கப்பட்ட கொடுமைகளில் இருந்து தப்பிப்பதற்காக முஸ்லிம் களின் சிறியதொரு குழு ஹிஜ்ரத் மேற்கொண்டு (அதாவது மக்காவைத் துறந்து) நஜாஷி மன்னரின் பாதுகாப்பைத் தேடி வருகிறார் கள். இதுதான் இஸ்லாத்தின் வரலாற்றில் முதல் ஹிஜ்ரத் என்று குறிப்பிடப்படுகிறது.**

**... மக்கத்து முஸ்லிம்களை அஸ்ஹமா மன்னர் எப்படி நடத்துகிறார்? அபீசீனிய நாட்டில் முஸ்லிம்கள் சந்தித்ததென்ன? சாதித்த தென்ன? தொடக்க காலத்தில் நடைபெற்ற அந்தச் சுவையாக நிகழ்ச்சிகள்தான் காட்சிச் சித்திரங்களாக இதோ! உங்கள் கண்கள் முன்னே ...)**

**நஜாஷி பாதுஷா அஸ்ஹமா:** (தமது நாட்டிற்கு வருகை தந்த மக்கத்து முஸ்லிம்களை தர்பாரினுள் வரவேற் கிறார்) வாருங்கள்! வாருங்கள்! தாங்கள் அனைவரின் வருகையும் நல்வரவு ஆகட்டும்! நீங்கள் எல்லாம் யார்? எங்கிருந்து வருகிறீர்கள்?

**முஸ்லிம்கள்:** நாங்கள் மக்கா வாசிகள். எங்களுடைய எதிரிகள் அங்கே எங்களை நிம்மதியாக வாழ விடவில்லை! அதனால் உங்கள் நாட்டைத் தேடி வந்துள்ளோம்.

**நஜாஷி பாதுஷா:** சொந்த நாட்டிலேயே உங்களுக்கு எதிரிகளா? உங்கள் நாட்டிலேயே உங்களுக்கு நிம்மதி இல்லையா? எதிரிகள் உங்கள் வாழ்க்கையைக் குலைத்துவிட்டார்களா? என்ன அநியாயம் இது? உங்களுக்கு ஏன் இந்த அவல நிலை? இதற்கு என்ன காரணம்? விவரமாகச் சொல்லுங்கள்!

**முஸ்லிம்கள்:** மன்னர் அவர்களே! எங்கள் கதையை விவரமாகச் சொல்கிறோம்., கேளுங்கள்! எங்கள் ஊரில் புதிதாக ஒரு நபி பிறந்தார். அவர்களின் அழகுத் திருப்பெயர்தான் **முஹம்மது.** இந்தப் பேரண்டத்தின் ஏக இறைவனாகிய எல்லாம் வல்ல அல்லாஹ்தான் இறுதி நபியாக அவர்களை அனுப்பி வைத்துள்ளான். அப்படிப்பட்ட மாண்பும் மகத்துவமும் பொருந்திய தீர்க்கத்தரிசியை நாங்கள் எல்லாம் விசுவாசம் கொண்டி ருக்கிறோம். அவர்கள் காட்டிய **இஸ்லாம்** எனும் புதிய மார்க்கத்தின்படி வாழ்கிறோம்.

ஆனால் எங்கள் மார்க்கத்தை ஏற்றுக்கொள்ளாத சிலர் எங்களுக்கு எதிரிகளாகி எங்களைத் துன்பப் படுத்துகிறார்கள். கண்ணை மூடிக்கொண்டு எங்கள் மீது கொடுமைகளைக் கட்டவிழ்த்து விடுகிறார்கள். மன்னர் அவர்களே! அந்தக் கொடுமைகளை எங்களால் தாங்க முடியவில்லை. இந்நிலையில்தான்... உங்கள் நாட்டிற்கு வந்தால் எங்களுக்கு நல்ல பாதுகாப்பு கிடைக்கும் என்று எங்கள் நபிதான் எங்களை இங்கு அனுப்பி வைத்துள்ளார்கள் ...

**நஜாஷி பாதுஷா:** உங்களைச் சேர்ந்தவர்களே உங்களுக்குத் தொலை கொடுக்கிறார்களா? என்ன அநியாயம் இது! இங்கு எங்கள் நாட்டிற்கு வந்தால் நிம்மதியாக வாழலாம் என்று அந்தப் புதிய நபிதான் உங்களை யெல்லாம் எனது நாட்டிற்கு வரச் சொன்னாரா? என்ன சொல்லி அனுப்பினார்? கேட்பதற்கே ஆச்சரியமாக இருக்கிறதே!

**முஸ்லிம்கள்:** ஆம்! எங்கள் நபிதான் எங்களை இங்கு வரச் சொன்னார். அவர் என்ன சொல்லி அனுப்பினார் என்றால், நீங்கள் அனைவரும் ஹபஷா நாட்டிற்குச் செல்லுங்கள். அங்கு நற்குணம் கொண்ட மன்னர் ஒருவர் இருக்கிறார். அவர் நீதி நேர்மையாக ஆட்சி செய்துகொண்டிருக்கிறார். அபயம் தேடிச் செல்லும் எல்லா மக்களுக்கும் அவர் உரிய பாதுகாப்பு அளிப்பார். அவரிடம் உதவி கேட்டு வரக்கூடிய எந்த மக்கள் மீதும் எந்த ஓர் அநீதி நிகழ்வதற்கும் அவர் அனுமதிக்கமாட்டார் என்று சொன்னார்.

**நஜாஷி பாதுஷா:** நீங்களும் உங்கள் நபியும் இவ்வாறு எங்கள் மீது நல்லெண்ணம் வைத்ததற்கு ரொம்ப நன்றி! உங்கள் நபி உங்களையெல்லாம் எங்கள் நாட்டிற்கு அனுப்பிவைத்து, இந்நாட்டின் மன்னராகிய நான் யாருக்கும் அநீதி செய்யமாட்டேன் என்று என்னைப் புகழ்ந்து கூறியதாகச் சொல்கிறீர்கள்., கேட்பதற்கே

ஆச்சரியமாக இருக்கிறது! இத்தனைக்கும் உங்கள் நபி எனது நாட்டிற்கு வந்ததில்லை! இங்கு வராமலேயே எங்கள் நாட்டைப் பற்றியும் எங்களின் குணங்களைப் பற்றியும் நன்கு அறிந்து வைத்து இருக்கிறாரே! பரவாயில்லை!

உங்கள் அனைவரையும் பார்த்தால் நன்மக்கள்போல் தெரிகிறது. நீங்கள் தாராளமாக எங்கள் நாட்டில் தங்கி இருக்கலாம். கொடுமைக்கு உள்ளான மக்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதை விட புண்ணியமான செயல் வேறு என்ன இருக்க முடியும்? நீங்கள் எங்கள் விருந்தாளிகள். எல்லா சௌகரியங்களும் உங்களுக்கு நாங்கள் செய்து தருவது எங்கள் கடமை.

(அதற்குள் இங்கு மக்காவில் ...குறைஷிகள் அப்துல்லாஹ் பின் அபீ ரபீஆ, அம்ர் பின் ஆஸ் இருவரையும் தேர்வு செய்து ஹபஷா வுக்கு அனுப்பிவைக்கிறார்கள். மன்னருக்கும் அவருடைய அரசவைப் பிரதிநிதிகளும் அன்பளிப்புகள் வழங்கி அவர்களுடைய இதயத்தைக் குளிர்விப்பதற்காக நிறைய அன்பளிப்புப் பொருள்களையும் கொடுத்து அனுப்புகிறார்கள். எப்படியாவது காரியத்தை வெற்றிகரமாக முடித்துக் கொண்டு வர வேண்டும் என்பதே நோக்கம். அவ்விருவரும் நஜாஷி பாதுஷாவிடம் வந்து பேரம் பேசுகிறார்கள்)

**குறைஷிகளின் தூதுவர்கள்:** மன்னர் அவர்களே! உங்களது இந்த சாம்ராஜியத்தில் சிலபேர் வந்து குடியேறி இருக்கிறார்கள். அவர்கள் விபரமில்லாத மனிதர்கள். தம்முடைய மூதாதையர்களின் மதத் தைப் புறக்கணித்த வர்கள். அதன்பிறகு உங்கள் கிறிஸ்தவ மதத்தி லாவது சேர்ந்தார்களா என்றால் அதுவும் இல்லை.

ஏதோ! புதியதொரு மதத்தைப் பின்பற்றுகிறார்களாம்., அதை எல்லோரிடமும் பிரச்சாரம் செய்வார்களாம்! அப்படி ஒரு மதத்தைப் பற்றி நாங்களும் கேள்விப்படவில்லை. நீங்களும்கூட கேள்விப்பட்டிருக்க மாட்டீர்கள். இவர்களின் தில்லுமுல்லுகளால் எங்கள் நாட்டில் பெரும் குழப்பம்! தீராப்பகை! எங்கு நோக்கினும் ... சகோ தரர்களுக்கு மத்தியிலேயே சண்டைச்சச்சரவுகள்! இப்படியாக எங்களது வாழ்க்கையில் நிம்மதியைக் குலைத்து விட்டார்கள் ... மன்னர் அவர்களே! அப்படிப்பட்டவர்கள்தான் நல்ல பிள்ளை நாணமாக நடித்துக் கொண்டு இங்கு வந்து தஞ்சம் புகுந்திருக் கிறார்கள்.

மன்னர் அவர்களே! இப்படி வந்தவர்களுடைய பெற்றோர், உறவினர்கள், குடும்பத்தினர்கள்தான் எங்களை இங்கு அனுப்பி, உங்களிடம் ஒரு கோரிக்கை வைக்கிறார்கள். அதாவது, மக்காவில் இருந்து இங்கு வந்துள்ள இவர்களை மீண்டும் மக்காவுக்கே திருப்பி அனுப்புமாறு கேட்கிறோர்கள். இந்த மதம்மாறிகளைப் பற்றி இவர் களின் குடும்பத்துப் பெரியவர்களுக்குத்தான் எல்லா விவரமும் தெரியும். இவர்களின் அடாவடித்தனங் களை அவர்கள்தான் அறிவார்கள்.

அவர்கள்தான் எங்கள் இருவரையும் உங்களிடம் அனுப்பி வைத்திருக்கிறார்கள். எனவே மக்காவில் இருந்து இங்கு வந்துள்ள இவர்களை எங்களிடம் ஒப்படைக்கும்படி - மன்னர் அவர்களே! உங்களிடம் மீண்டும் மீண்டும் பணிந்து கேட்டுக் கொள்கிறோம்.

**அரசவைப் பிரதானிகள்:** (அம்ர் பின் ஆஸ் மற்றும் அப்துல்லாஹ் இருவரும் அள்ளிக்கொடுத்த அன்பளிப்பு களுக்குக் கைமாறு செய்வதாக எண்ணிக்கொண்டு கூறினார்கள்:) பாதுஷாவே! இவர்கள் இருவரும் சொல் வது உண்மைதான்! இங்கு புதிதாக வந்த முஸ்லிம் களை இவ்விருவரிடமும் ஒப்படைத்து விடுங்கள். அவர்களைப் பற்றி - அந்த ஊரில் அவர்கள் என்னென்ன தில்லுமுல்லுகள் செய்தார்கள் என்பது பற்றி அவர்களின் தாய் தந்தைக்கும் குடும்பத்தினருக் கும்தான் எல்லாம் தெரியும். நாம் ஏன் அவர்களின் விஷயத் தில் வீணாகத் தலையிட்டு வம்பை விலைக்கு வாங்கிக் கொள்ள வேண்டும்.

**நஜாஷி பாதுஷா:** (மிகவும் கோபம் அடைந்தவராக) ஒரு காலமும் முடியாது! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! என்னைத் தேடி அடைக்கலம் புகுந்திருக்கும் மக்களை இப்படியே இவ்விருவரிடமும் ஒப்படைக்க மாட்டேன். இவ்விருவர் சொல்வதை மட்டும் வைத்து எந்த ஒருமுடிவுக்கும் நான் வரமுடியாது. முஸ்லிம்களை அழைத்து - இவ்விருவரும் சொல்லும் குற்றச்சாட்டுகள் பற்றி கேட்க வேண்டும். அவர்கள் என்ன பதில் சொல்கிறார்கள் என்றும் பார்க்க வேண்டும்! அதுதான் நீதி!

(இவ்வாறு கூறிக்கொண்டு மன்னர் முஸ்லிம்களை அழைத்து வருமாறு ஆணையிடுகிறார்)

- திரை விழுகிறது -

## காட்சி 18

## பங்கு பெறுவோர்

**நஜாஷி பாதுஷா அஸ்ஹமா, ஜஅ்ஃபர் பின் அபீ தாலிப், மக்காவில் இருந்து வந்த முஸ்லிம்கள், பாதிரிமார்கள், அரசவைப் பிரதானிகள், அம்ர் பின் ஆஸ் மற்றும் அப்துல்லாஹ் பின் அபீ ரபீஆ)**

**(பின்னணிக் குரல்: முஸ்லிம்கள் எங்கெங்கு செல்கிறார்களோ எங்கெல்லாம் வாழ்கிறார்களோ அங்கெல்லாம் இஸ்லாத்தின் அடிப் படைக்கொள்கை பற்றிய விளக்கமும் முழக்கமும் என்றைக்கும் தொடர்ந்து நடைபெற்று வருகிறது என்பதே உண்மை! இவ்வுலகத் தில் இறைவன் என்றிருப்பது ஒருவன்தான்., அவன் அனுப்பிவைத்த**

**இறுதித் தூதர்தான் முஹம்மது நபி** என்கிற ஏகத்துவக் கொள்கை யையும் தூதுத்துவக் கருத்துகளையும் எந்தச் சூழ்நிலையிலும் -எந்த ஆட்சியாளர் முன்னிலையிலும் எடுத்துரைக்க என்றைக்கும் முஸ்லிம்கள் தயங்கிய தில்லை!

**இஸ்லாத்தின் தொடக்க காலத்தில் ஹபஷா நாட்டில் நடைபெற்ற அழைப்புப்பணி ரீதியிலான இந்நிகழ்ச்சிகள் இவ்வுண்மைக்குப் பெரும் சான்றாகவும் படிப்பினையாகவும் திகழ்ந்து கொண்டிருக்கிறது. அவைதான் காட்சிச் சித்தரங்களாக இதோ! உங்கள் கண்கள் முன்னே ...)**

முஸ்லிம்கள் அரசரின் தர்பாருக்கு வருகிறார்கள். அங்கு அம்ர் பின் ஆஸ், அப்துல்லாஹ் பின் அபீ ரபீஆ இருவரும் நின்று கொண்டிருப்பதைக் கண்டதும், குறைஷிகள் ஏதோ சூழ்ச்சி செய்கிறார்கள் என்பதை மட்டும் புரிந்து கொண்டார்கள்!

(அவர்கள் ஒருவருக்கொருவர் பேசிக் கொள்கிறார்கள்)

**முஸ்லிம்களில் சிலர்:** நடந்தது என்ன என்று நம்மிடம் மன்னர் கேள்விகள் கேட்டால் என்ன பதில் சொல்லப் போகிறீர்கள்? நாம் சொல்வதை மன்னர் ஏற்றுக்கொள்வாரா? இல்லை,நம்மையெல்லாம் மீண்டும் மக்காவுக்கே திருப்பி அனுப்பிவிடுவாரா?

**வேறு சிலர்:** நடந்த நிகழ்ச்சிகளை எடுத்துச் சொல்வோம். நமக்குத் தெரிந்த விளக்கத்தைச் சொல்வோம். நம்முடைய நபி நமக்கு என்னென்ன விஷயங்களைக் கற்றுத்தந்தார்களோ அவற் றைச் சொல்வோம். அதனால் என்ன வந்தாலும் சரிதான்! நமது ஜமாஅத் - குழுவிற்கு ஜஅஃபர் பின் அபீ தாலிப்தான் தலைவர். நம் சார்பாக அவர்தான் மன்னிடம் பேச வேண்டும். அவர்தான் சொல்ல வேண்டிய விஷயங்களை தக்க சான்றுகளுடன் தெளிவாக எடுத்துரைப்பார்.

**(இவ்வாறாக ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டே தர்பாரில் நுழை கிறார்கள். தங்கள் சார்பாக மன்னரிடம் பேசுவதற்கு ஜஅஃபர் பின் அபீ தாலிப் (ரலி) அவர்களை முன்னிறுத்துகிறார்கள்)**

**நஜாஷி பாதுஷா:** முஸ்லிம்களே! குறைஷிகளின் சார்பாக இங்கு வந்துள்ள இந்த இரண்டு பேரும் உங்கள் விஷயத்தில் என்ன சொல்கிறார்கள் என்று பார்த்தீர்களா? நீங்கள் புதியதொரு மதத் தைப் பின்பற்றுவதாகவும் மக்கா நகரில் ஏனைய மக்களிடையே அதனைப் பிரச்சாரம் செய்வதாகவும் உங்கள் மூதாதையரின் மதத்தைப் புறக்கணிப்பதாகவும் உங்கள் மீது குற்றம் சுமத்துகிறார்கள். நீங்கள் அப்படிச் செய்வதனால் உங்கள் நாட்டில் வீணான சண்டை சச்சரவுகள், குழப்பங்கள் ஏற்பட்டுள்ளன என்றும் சொல்கிறார்கள். நீங்கள் உங்கள் மூதாதையரின் மதத்தை ஏன் புறக்கணிக்கிறீர்கள்? உங்களது புதிய மதத்தில் அப்படி என்ன சிறப்பைக் கண்டீர்கள்?

**ஜஅஃபர் (ரலி)அவர்கள்:** மன்னர் அவர்களே! என் பெயர் ஜஅஃபர் மக்காவில் இருந்து இங்கு வந்துள்ள முஸ்லிம்கள் சார்பாக நான் உங்களிடம் விளக்கம் அளிக்க விரும்புகிறேன். முதலில் மக்கத்து குறைஷிகளின் ஆட்கள் எங்கள் மீது சுமத்துகிற குற்றச்சாட்டை மறுக்கின்றேன். உண்மையில் என்ன நடந்தது என்பதை உங்கள் முன்னிலையில் தெளிவுபடுத்த விரும்புகிறேன்.

மன்னர் அவர்களே! நாங்கள் ஜாஹிலிய்யா ♥ எனும் வழிகேட்டில் - அபத்தமான, தீய குணங்களில் உழன்று கொண்டிருந்தோம். சிலை வணக்கம் புரிந்து கொண்டும் செத்த பிராணிகளைச் சாப்பிட்டுக் கொண்டும் இருந் தோம். மானக்கேடான செயல்களைச் செய்தோம். இரத்த பந்தங்களின் உறவை முறித்துக் கொண்டி ருந்தோம். அண்டை வீட்டினருக்குத் துன்பம் கொடுத்துக் கொண்டிருந்தோம். எங்களில் பலசாலிகள், பலவீனர்களின் உரிமைகளைப் பறித்து அனுபவித்துக் கொண்டிருந்தார்கள்.

இப்படி இருந்து கொண்டிருந்த நிலையில்தான் எல்லாம் வல்ல இறைவனாகிய அல்லாஹ், எங்களிலிருந்தே ஒருதூதரை -நபியை அனுப்பித்தந்தான். அவர் யார்? எப்படிப்பட்டவர் என்பதை நாங்கள் முன்னரே அறிவோம். அவருடைய குடும்பப் பாரம்பரியமும் எங்களுக்குத் தெரியும்.

அவர் எங்களை அல்லாஹ்வின் பக்கம் அழைத்தார். அவன் ஒருவனையே கடவுளாக ஏற்று வணங்கிட வேண்டும் என்று போதித்தார். நாங்களும் எங்கள் மூதாதையர்களும் காலாகாலமாக மேற் கொண்டு வந்த சிலைவழிபாடுகளையும் விக்ரக ஆராதனைகளையும் கைவிட்டுவிடும்படி ஏவினார்.

---

♥ **ஜாஹிலிய்யா எனும் சொல் அறிதல் என்பதற்கு எதிர்ச் சொல்லாகிய ஜஹ்ல் என்பதில் இருந்து வந்ததல்ல. மூடத்தனம், அபத்தம், கோபம், முன்கோபம், விவேகமின்மை, எனும் பொருள்களைக்கொண்ட ஜஹ்ல் என்பதில் இருந்து வந்த தாகும். ஏனெனில், இச்சொல், இஸ்லாம் என்பதற்கு எதிர்ப்பதமாகும். இஸ்லாம் என்பது, அல்லாஹ்வின் திருமுன் பணிதல், கீழ்ப்படிந்து நடத்தல் எனும் பொருள் களையும் அதிலிருந்து மலரக்கூடிய மேலான குணவொழுக்கத்தையும் குறிக்கும். (நூல்: டாக்டர் ஷௌக்கி ளைஃப் அவர்களின் அல் அஸ்ருல் ஜாஹிலி, டாக்டர் யஹ்யா அல் ஜபூரி அவர்களின் அஷ்ஷிஅ்ருல் ஜாஹிலி)**

உண்மை பேசுதல், அமானிதங்களை ஒப்படைத்தல், இரத்த பந்துக்களுடன் இணைந்து வாழ்தல், அண்டை வீட்டாருடன் நல்லு றவு பேணுதல், தீமைகள் புரிவதை விட்டும் கொலை செய்வதை விட்டும் விலகி வாழுதல் ஆகியவற்றை எங்களுக்கு ஏவினார். மானக்கேடான செயல்களைச் செய்தல், பொய் பேசுதல், அநாதைகளின் சொத்துகளைத் தின்னுதல்,கற்புடைய பெண்கள் மீது அவதூறு கூறுதல் ஆகியவற்றை விட்டும் எங்களைத் தடுத்தார்.

மேலும் தொழுகையை நிறைவேற்ற வேண்டும். ஜகாத் கொடுக்க வேண்டும். நோன்பு நோற்க வேண்டும் என்றும் எங்களை ஏவினார்.

அந்தத் தூதர் கூறியவற்றை நாங்கள் ஏற்றுச்செயல்பட்டோம். அவரை உண்மையான தூதர் என்று நம்பி னோம். அல்லாஹ்விடமிருந்து அவர் கொண்டுவந்த வழிகாட்டல்களை மனதார ஒப்புக்கொண்டோம். அல்லாஹ் ஒருவனையே வணங்கினோம். அவனுக்கு இணைவைத்து வணங்குவதைத் தவிர்த்தோம்.என்னென்ன காரியங் கள் எங்களுக்கு விலக்கப்பட்டவை என்று அவர் சொன்னாரோ அவற்றை விலக்கப்பட்டவை என ஏற்றுக் கொண்டோம். எங்களுக்கு அவர் அனுமதித்து ஆகுமாக்கியவற்றை நாங்களும் ஆகுமாக்கிக் கொண்டோம்.

இதனால் எங்களைச் சேர்ந்த சிலர், எங்கள் மீது வரம்பு மீறினார்கள். எங்களை அடித்துத் துன்புறுத்தி னார்கள். நாங்கள் ஏற்றுக்கொண்ட உண்மை மதத்தைப் பின்பற்ற விடாமல் எங்களைத் தடுத்தார்கள். உயர்வும் மேன்மையும் மிக்க அல்லாஹ்வை வணங்குவதை விட்டும் எங்களைத் தடுத்து, மீண்டும் சிலைவணக் கத்தின் சேற்றில் எங்களைத் தள்ளுவதற்காக - முன்னர் செய்து வந்த அசிங்கங்களை மீண்டும் நாங்கள் செய்ய வேண்டும் என்ப தற்காக எல்லாவிதமான சோதனைகளையும் எங்களுக்குக் கொடுத்தார்கள்.

இப்படி எங்களை அவர்கள், அடக்க முற்பட்டபோது, தொடர்ந்து அநீதி இழைத்தபோது, எங்களுக்கு நெருக்கடிக்கு மேல் நெருக்கடி கொடுத்தபோது, எங்களுக்கும் எங்கள் மதத்திற்கும் மத்தியில் குறுக்கீடு செய்தபோதுதான் ... மன்னர் அவர்களே! நாங்கள் உங்கள் நாட்டிற்கு வந்தோம். மற்ற நாடுகளையும் அங்குள்ள மன்னர்களையும் விட்டுவிட்டு உங்களை நாடி வந்தோம்., உங்கள் நாடு தேடிவந்தோம். உங்கள் அருகில் வசிக்க வேண்டுமென ஆவல் கொண்டோம். நீங்கள் இருக்கும்போது எங்களுக்கு எந்தத் துன்பதும் நேராது., எந்த அநீதியும் இழைக்கப்படாது என்று நல்லெண்ணம் கொண்டுள்ளோம்! ஆம்! மன்னர் அவர்களே! இந்த விஷயத்தில் உங்களை முழுமையாக நம்புகிறோம்!

**நஜாஷி பாதுஷா:** ஆகா! என்ன அருமையான பதில்! ஏவ்வளவு தெளிவான விளக்கம்! யதார்த்தமான கருத்துகள்! நீங்கள் உண்மைதான் பேசியுள்ளீர்கள்! உங்கள் பேச்சு கள்ளங்கபடமற்றது. நீங்கள் அனை வரும் எந்தக் குற்றமும் செய்யாதவர்கள் என்றே தெரிகிறது! ஜஅ்ஃபர் அவர்களே! நீங்கள் சொல்வதை நான் முழுமையாக நம்புகிறேன் ... இறைவனிடம் இருந்து உங்கள் நபி கொண்டுவந்ததாகச் சொல்கிறீர்களே அந்த வேதத்தின் திருவசனங்கள் ஏதாவது உம்மிடம் இருக்கிறதா?

**ஜஅஃபர் பின் அபீ தாலிப்:** ஆம்! இருக்கின்றன! அந்த அழகுத் திருவசனங்களை நாங்கள் அனைவருமே இனிமையாக ஓதுவோம்!

**நஜாஷி பாதுஷா:** இருந்தால் அவற்றைக் கொஞ்சம் எனக்கு ஓதிக் காட்டுங்கள். பார்க்கலாம்!

(ஜஅஃபர் பின் அபீ தாலிப் அவர்கள், திருக்குர்ஆனின் மர்யம் எனும் 19 வது அத்தியாயத்தின் ஆரம்ப பகுதி களை ஓதுகிறார்கள்)

தர்பாரில் முழு அமைதி நிலவியது. திருக்குர்ஆனின் இனிமை யான ஓதலை எல்லோரும் அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். அவை இறைவனின் வாக்குகளே என்கிற உணர்வும் உந்துதலும் அனைவரை யும் ஆட்கொள்கிறது! மன்னரும் அங்கு அமர்ந்திருந்த பாதிரிமார்கள் உட்பட அனைவரும் உணர்ச்சி மேலீட் டால் அழுது விடுகிறார்கள். மன்னரின் கண்கள் வடித்த கண்ணீர், அவரது நீண்ட தாடியையும் நனைத்துக் கொண்டு அதன் வழியே வடிந்து தரையில் சொட்டடித்தது.

**நஜாஷி பாதுஷா:** (உணர்ச்சிவசப்பட்ட நிலையில் - அழுத கண்ணீரைத் துடைத்தவாறு மெதுவாகப் பேசி னார்) ஜஅஃபர் அவர்களே! இப்போது நீங்கள் ஓதிக் காண்பித்த இந்த வேத வசனங்களும் ஈஸா நபி கொண்டுவந்த வேதமும் - நிச்சயமாகச் சொல்கிறேன் ஒரே மூல உற்றில் இருந்து வெளிப்பட்டவை என்றுதான் தெரிகிறது. இரண்டும் இறைவன் மொழிந்த வேதங்கள்தாம்!

(உடனே மன்னர், குறைஷிகளின் தூதுவர்களாக வந்த அவ்விரு வரையம் நோக்கிக் கூறினார்:) அல்லாஹ் வின் மீது ஆணையிட்டுச் சொல்கிறேன்! இந்த முஸ்லிம்களை உங்களிடம் ஒப்படைக்க முடியாது! நீங்கள் இப்படியே திருமக்காவுக்குத் திரும்பிப் போகலாம்.

(நஜாஷி பாதுஷா இவ்வாறு நியாயமான கருத்தை வழங்கியதைத் தொடர்ந்து தர்பார் கலைந்தது. எல்லோரும் வெளியே புறப்பட்டார்கள். அம்ர் பின் ஆஸ் மற்றும் அப்துல்லாஹ்வின் முகத்தை இழிவும் அவமான மும் கவ்விக்கொண்டது. மிகவும் கேவலப்பட்டவர்களாக தர்பாரில் இருந்து வெளியே வந்தனர். அடுத்து என்ன செய்வது என்று ஆலோசனை செய்தனர்)

**அம்ர் பின் ஆஸ்:** எவ்வளவோ முன்னேற்பாடுகளைச் செய்தும் மன்னரை மசியவைக்க முடியவில்லையே! காரியம் கைகூடாமல் போய்விட்டதே! முஸ்லிம்கள் பக்கம்தானே மன்னர் சாய்ந்து விட்டார். பாதிரிமார்கள் நமக்குச் சார்பாகத்தான் கருத்து சொன்னார்கள். அதையும் மன்னர் கேட்கவில்லையே!

**அப்துல்லாஹ் பின் அபீ ரபீஆ:** இப்பொழுது என்ன செய்வது? மக்காவுக்குத் திரும்பிச் சென்று நடந்த விவரத்தை குறைஷிகளிடம் சொல்வோம். மன்னர்தான் அவர்களை மக்காவுக்குத் திரும்ப அனுப்ப மறுத்து விட்டாரே!

**அம்ர் பின் ஆஸ்:** என்ன, இப்படியே மக்காவுக்குத் திரும்பவா சொல்கிறீர்? இழிவையும் அவமானத்தையும் தாங்கிக்கொண்டா...?எந்த முகத்தைக்கொண்டு குறைஷிகளிடம் செல்வது? அல்லாஹ்வின் மீது ஆணையாக! நாளையும் நஜாஷியிடம் நான் வருவேன். ஏசு நாதர் பற்றி முஸ்லிம்கள் சொல்லிக்கொண்டிருக்கின்ற இன்னொரு முரண்பாடான விஷயத்தை அவரிடம் சொல்வேன். அதன் மூலம் முஸ்லிம்களின் முகத்திரையைக் கிழிப்பேன். அவர்கள் விஷயத்தில் மன்னர் வைத்திருக்கும் நல்லெண்ணத்தை மாற்றத்தான் போகி றேன். இந்நாட்டிற்கு வந்து அவர்கள் அனுபவித்துக் கொண்டிருக் கும் நிம்மதியை அதன் மூலம் குலைத்தே தீருவேன்!

**அப்துல்லாஹ் பின் அபீ ரபீஆ:** அப்படிச் செய்ய வேண்டாம். இங்கு வந்திருக்கும் முஸ்லிம்களுக்கும் சொந்த பந்தங்கள் இருக்கிறார்கள். இவர்கள் நமது கொள்கையை ஏற்காதவர்கள்தான், எதிரானவர்கள்தான் என்றா லும் இவர்கள் நமது நாட்டைச் சேர்ந்தவர்கள்தானே! ஏதோ! இங்கு வந்தற்காக ஒருமுறை மன்னரிடம் பேசி ஆகிவிட்டது. நாம் எடுத்துவைத்த கோரிக்கையை அவர் பரிசீலிக்கவில்லை. விஷயத்தை இத்துடன் முடித்துக் கொண்டு மக்காவுக்குத் திரும்பிடுவோம்.

இங்கேயே இருந்து கொண்டு மீண்டும் மீண்டும் முஸ்லிம்களைப் பற்றி புகார் சொல்லிக்கொண்டிருப்பதில் அர்த்தம் இல்லை! அப்படிச் செய்ய வேண்டாம்!

(ஆனால் அம்ர் பின் ஆஸ் தனது கருத்தில் பிடிவாதமாக இருந்தார்)

**அம்ர் பின் ஆஸ்:** நாளையும் மன்னரிடம் வருவேன். முஸ்லிம்களை சும்மா விடமாட்டேன் என்று சபதம் செய்தார்! - திரை விழுகிறது -

## காட்சி 19

## பங்கு பெறுவோர்

**நஜாஷி பாதுஷா அஸ்ஹமா, ஜஅஃபர் பின் அபீ தாலிப், மக்காவில் இருந்து வந்த முஸ்லிம்கள், பாதிரிமார்கள், அமைச்சர்கள், அம்ர் பின் ஆஸ் மற்றும் அப்துல்லாஹ் பின் அபீ ரபீஆ)**

**(பின்னணிக் குரல்: இப்படியே மக்காவுக்குத் திரும்பிச் சென்று விடலாம் என்று அப்துல்லாஹ் பின் அபீ ரபீஆ சொன்னதை அம்ர் பின் ஆஸ் ஏற்றுக்கொள்ளவில்லை. அவரையும் வற்புறுத்தி அழைத் துக்கொண்டு மறுநாளும் தர்பாரில் ஆஜரானார். அவ்விருவரால் ஏதாவது சாதிக்க முடிந்ததா? மன்னரின் மனதை மாற்ற முடிந்ததா? )**

**நஜாஷி பாதுஷா:** என்ன இன்றைக்கும் வந்திருக்கிறீர்களே! என்ன விஷயம்? என்ன சொல்ல விரும்புகிறீர்கள்?

**அம்ர் பின் ஆஸ்:** மன்னர் அவர்களே! இங்கு வந்துள்ள முஸ்லிம்களுக்கு நீங்கள் எந்த அடிப்படையில் அடைக்கலம் கொடுத்தீர்கள் என்றே எனக்குப் புரியவில்லை. உங்கள் உயிரினும் மேலாக நீங்கள் ஏற்றிப்போற்றி மதித்து வரக்கூடிய ஏசு நாதர் விஷயத்தில் இவர்கள் எவ்வளவு பெரிய அபாண்டங்களைச் சொல்கிறார்கள், உங்களுக்குத் தெரியுமா? இந்த விஷயங்கள் உங்கள் கவனத்திற்கு வந் திருக்காது என்றே கருதுகிறேன்...

அவர் ஒருசாதாரணமான மனிதர்தான்., ஏனைய மனிதர்களைப் போன்றுதான் அவரும் பிறந்தார்., வளர்ந் தார், இதற்குமேல் ஏசு நாதருக்கு எந்த உயர்அந்தஸ்தும் இல்லை என்று கூறுகிறார்கள். மன்னர் அவர்களே!, ஏசுநாதர் இறைவனில்லையாம்., அவரை இறைமகன் என்றும் ஏற்கமாட்டார்களாம்! சுாதாரணமான மனிதர் தானாம், ஓர் அடியார்தானாம்! இந்தச் சொத்தை வாதத்தை - இந்தக் கூத்தினை நீங்களெல்லாம் எப்படி ஜீரணிக்கப் போகிறீர்கள்?

நான் கேட்கிறேன்: முஸ்லிம்கள் கூறக்கூடிய இந்தக் கருத்தை நீங்கள் ஏற்றுக் கொள்கிறீர்களா? உங்கள் கிறிஸ்தவ மதம் ஏற்கிறதா? இங்கு கூடியிருக்கும் பாதிரிமார்கள் ஏற்கிறார்களா? கிறிஸ்தவ பெரு மக்கள்தான் ஏற்றுக்கொள்கிறார்களா? சொல்லுங்கள் மன்னரே! சொல்லுங்கள்!

ஏசு கிறிஸ்து பற்றி இப்படி இல்லாத பொல்லாத அபாண்டங்களைக் மனம்போனபடி இட்டுக்கட்டிக் கொண்டு கற்பனைகளை அள்ளி வீசும் இந்த முஸ்லிம்களுக்கு ஒரு கிறிஸ்தவ மன்னர் தமது நாட்டில் அடைக்கலம் கொடுக்கலாமா? இதுதான் எனது கேள்வி!

**நஜாஷி பாதுஷா:** (சற்று நேரம் அமைதியாக இருந்தார். ஏதோ தீவிர மாகச் சிந்திப்பதுபோல் காணப்பட்டார்) எங்கள் நாட்டை நாடி வந்துள்ள முஸ்லிம்களைப் பற்றி நேற்று ஒன்றைச் சொன்னீர். இன்று வந்து இன் னொன்றைச் சொல்கிறீர்கள்! கேட்பதற்குக் கவர்ச்சியாகத்தான் இருக்கிறது. பரவாயில்லை!

எங்கள் ஏசு கிறிஸ்து பற்றி முஸ்லிம்கள் அவதூறு கூறுகிறார்கள் என்று நீங்கள் சொல்கிறீர்கள்! நீங்கள் சுமத்துகின்ற இன்றைய குற்றச்சாட்டுளாவது உண்மைதானா? என்று தெரிந்து கொள்ள வேண்டாமா? எனவே முஸ்லிம்களை அழைத்து விளக்கம் கேட்டுக் கொண்டு தான் என்னால் எதுவும் செய்யமுடியும்.

(மன்னர் மீண்டும் முஸ்லிம்களை அழைத்து விளக்கம் கேட்ப தாகச் சொல்கிறாரே என்று அம்ர் பின்ஆஸ் கலக்கம் அடைகிறார். மீண்டும் தோல்விப் பயத்தால் துவண்டுவிடுகிறது அவரது முகம்...)

(முஸ்லிம்கள் மன்னரின் தர்பாருக்கு வருகிறார்கள்)

**நஜாஷி பாதுஷா:** ஜஃபரே! முஸ்லிம்களாகிய நீங்கள் ஏசு நாதரைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்? உங்களது கொள்கை என்ன?

**ஜஅஃபர் (ரலி) அவர்கள்:** மன்னர் அவர்களே! இறைவன் திருக்குர்ஆனில் இறக்கி அருளியதாக எங்கள் நபி எங்களுக்கு என்ன கருத்தைக் கூறுகிறார்களோ அதுதான் எங்களுடைய கொள்கை! அவற்றை அப்படியே நாங்கள் ஏற்றிருக்கிறோம்., நம்புகிறோம். அதாவது, ஏசு நாதர் எனும் ஈஸா, அல்லாஹ்வின் நல்லடியார், அவன் அனுப்பிய கண்ணியத்திற்குரிய திருத் தூதர்!

இதற்கும் மேலாக இன்னொரு சிறப்பும் ஏசுநாதருக்கு உண்டு! அதுதான்: **ஆகுக** என்று அல்லாஹ் பிறப்பித்த சிறப்புக் கட்டளையின் அடிப்படையில் படைக்கப்பட்டார் என்பது! ஆம்! கன்னி மரியத்தின் பரிசுத்த மான கருவறையை நோக்கி எல்லாம் வல்ல ஏக இறைவனாகிய அல்லாஹ் பிறப்பித்த கட்டளையால் ஏசு நாதர் கருவில் உருவாகி வளர்ந்து இவ்வுலகில் பிறந்தார்கள். அப்படிப்பட்டதோர் பேரற்புதமான முறையில் ஏசு நாதர் அவர்கள் திகழ்ந்து கொண்டிருக்கிறார்கள்!

**நஜாஷி பாதுஷா:** (மகிழ்ச்சி பொங்க உணர்ச்சி மேலிட உரத்த குரலில்) ஜஃபரே! நீர் முற்றிலும் உண்மை உரைத்தீர்! உண்மை தான் உரைத்தீர்! மிகமிக கண்ணியமான உயர் அந்தஸ்தை ஏசு நாதருக்கு நீங்கள் கொடுத்துள்ளீர்கள்! இதுதான் உண்மை! ஏசுநாதர் அவர்களும் தம்மைக் குறித்து இவ்வாறுதான் அறிமுகப் படுத்தி இருந்தார்கள்!

உடனே நஜாஷி பாதுஷா தனது கையால் தரையில் லேசாக அடித்து ஒரு துரும்பை எடுத்துக்கொண்டு, ஜஅஃபர் அவர்களே! அல்லாஹ்வின் மீதாணை! ஈஸாவின் யதார்த்த நிலை, நீங்கள் கூறியதைக் காட்டிலும் இந்தத் துரும்பு அளவுகூட கூடுதலாகவும் இல்லை! குறைவாகவும் இல்லை! அந்த அளவுக்கு மிகத் துல்லிய மான - மிகமிகச் சரியான கொள்கைதான் உங்கள் கொள்கை! இந்தக் கொள்கையில் எந்தத் தவறும் இல்லை!

**பாதிரிமார்கள்:** (எல்லாரும் ஒட்டுமொத்தமாக கனைத்துக் கொடுத்துக் கொண்டு தங்களது அதிருப்தியை வெளிப்படுத்துகிறார்கள்) ம்ம் ம்ம் பார்த்து ... நிதானமாகப் பேசுங்கள்! என்று தங்களுக்குள் மெதுவாக முணுமுணுக்கிறார்கள்.

(ஏசு நாதர் பற்றி முஸ்லிம்கள் கூறும் இந்தக் கருத்து, கிறிஸ்த வர்களின் குமாரத்துவக் கொள்கைக்கு நேர் முரணமானது. எனவே மன்னர் அதைப் பொத்தாம் பொதுவாக ஆதரிக்கக்கூடாது என்று பாதிரிமார்கள் குறிப்பால் உணர்த்தினார்கள்)

**நஜாஷி பாதுஷா:** (பாதிரிமார்களை நோக்கி) நீங்களெல்லாம் எதற்காக இவ்வாறு கனைத்துக் கொடுக்கி றீர்கள் என்பது தெரிகிறது. உண்மையை உண்மையென ஏற்றுக் கொள்வதுதான் புத்தி சாலித்தனம்! ஏசுநாதர் பற்றி ஜஃபர் எடுத்துரைத்தது உண்மையான கருத்துதான்! உண்மையான கொள்கைதான்! இதை நீங்கள் ஏற்றுக்கொள்ளவில்லை என்றாலும் சரியே! நான் அதை ஏற்றுக் கொள்கிறேன். உண்மையை ஏற்றுக் கொள்ளத் தயங்க வேண்டிய அவசியமில்லை! உண்மைக்கு எப்பொழுதும் அழிவில்லை! அது என்றைக்கும் மறையப்போவதுமில்லை.

**மன்னர்:** (பிறகு முஸ்லிம்களை முன்னோக்கி கூறுகிறார்:) நீங்கள் செல்லுங்கள்! இந்நாட்டில் நிம்மதியும் பாதுகாப்பும் உங்களுக்கு என்றைக்கும் உண்டு! உங்களை யார் திட்டுகிறார்களோ அவர்களே இழப்புக்கு உரியவர்கள்! யார் உங்களைத் திட்டுகிறார்களோ அவர்களே இழப்புக்கு உரியவர்கள்! யார் உங்களைத் திட்டுகிறார்களோ அவர்களே இழப்புக்கு உரியவர்கள்!

உங்களில் ஒருவருக்கு நான் துன்பம் கொடுப்பதற்காக - அதற்குப் பகரமாக இந்த நெடிதுயர்ந்த மலை அளவு ஏராளமான தங்கம் எனக்குத் தரப்பட்டாலும் அதை நான் விரும்பவில்லை. எனவே குறைஷிகளின் சார்பாக இவ்விருவதும் கொண்டுவந்த அன்பளிப்புகளைத் திருப்பிக்கொடுத்து விடுங்கள். அவை எனக்குத் தேவை யில்லை! லஞ்சம் கொடுத்துக் காரியத்தைச் சாதிக்க விரும்பு கிறார்கள் போல் தெரிகிறது!

அல்லாஹ்வின் ஆணையாகச் சொல்கிறேன்! எனது ஆட்சி பறிபோன பிறகு அதனை அல்லாஹ் எனக்கு மீட்டிக் கொடுத்தானே, அப்போது என்னிடம் லஞ்சம் வாங்கினானா? வாங்கிக்கொண்டுதான் அந்த உபகா ரத்தை அல்லாஹ் எனக்குச் செய்து கொடுத்தானா? இல்லையே! அப்படி இருக்க நான் எப்படி இலஞ்சம் வாங்குவேன்?

லஞ்சம் வாங்கிக்கொண்டு உண்மைக்குப் புறம்பாகச் செயல்படுவது அந்தக் கருணைமிக்க இறைவனுக்குச் செய்யும் நன்றித் துரோக மில்லையா? மக்கள் எனக்குத் துரோகம் செய்யத் திட்டம் தீட்டிய நேரத்தில் அதற்கு இறைவன் செவிசாய்க்கவில்லை எனும் பொழுது இவர்களிடம் லஞ்சம் வாங்கிக்கொண்டு அவனுக்கு நான் துரோகம் செய்வேனா?

(இவ்வாறு மன்னர் திட்டவட்டமாக அறிவித்ததும் அம்ர் பின் ஆஸ், அப்துல்லாஹ் பின் அபீ அபீ ரபீஆ இருவரும் அவமானப்பட்டு திரும்பினார்கள்)

- திரை விழுகிறது -

## காட்சி 20

## பங்கு பெறுவோர்

**நஜாஷி பாதுஷா அஸ்ஹமா, ஜஃ்பர் பின் அபீ தாலிப், மக்காவில் இருந்து வந்த முஸ்லிம்கள், பாதிரிமார்கள், மந்திரிமார்கள்.**

**அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு நபித்துவம் வழங்கப்பட்டு 13 ஆண்டுகளுக்குப் பிறகு ... மதீனா ஹிஜ்ரத் நடைபெற்றது. அதிலிருந்து சரியாக ஆறாம் ஆண்டு ஹுதைபிய்யா உடன்படிக்கை கையெழுத் தானது. அதில் முஸ்லிம்களுக்கும் குறைஷிகளுக்கும் மத்தியில் 10 ஆண்டுகள் போர் நிறுத்தம் செய்வதென முடிவு செய்யப்பட்டு அதன் பயனாக அரேபியா தேசம் முழுவதும் அமைதி நிலவியது. அந்தச் சூழ்நிலையில்தான் அண்ணல் நபி(ஸல்) அவர்கள், இஸ்லாத்தை ஏற்குமாறு அழைப்பு மடல்கள் எழுதச்செய்து அண்டை நாடு களின் ஆட்சி யாளர்களுக்கு அனுப்பி வைக்கிறார்கள்!**

**... அப்படி ஒரு மடலை எடுத்துக்கொண்டு நஜாஷி மன்னரிடம் வழங்குவதற்காக அமர் பின் உமைய்யா ளம்ரி (ரலி) எனும் தோழர் ஹபஷா நோக்கி விரைந்து வருகிறார். அப்பொழுது நடந்ததென்ன? அம்மடலுக்கு நஜாஷி மன்னர் அளித்த பதில் என்ன? அது தொடர் பான சுவாரசியமான நிகழ்ச்சிகள்தான் இதோ! காட்சிச் சித்திரங் களாக உங்கள் முன்னே ...)**

அண்ணல் நபி (ஸல்) அவர்களின் மடலைப் பெற்றுக்கொண்டு அமர் பின் உமையா ளம்ரி(ரலி) எனும் நபித்தோழர் ஹபஷா வந்து சேருகிறார். நேராக நஜாஷி மன்னரின் அரண்மனைக்கு வந்து அவரது தர்பாரில் கம்பீரமாக நுழைகிறார். மன்னரின் சிம்மாசனத்தின் அருகே வந்து அண்ணல் நபி (ஸல்) அவர்களின் மடலை கொடுக்கிறார்கள்.

**மன்னர்:** நீங்கள் யார்? இது என்ன மடல்?

**அம்ர் பின் உமையா ளம்ரி:** நான் மதீனாவில் இருந்து வருகிறேன். இது முஹம்மது நபி (ஸல்) அவர்கள் தாங்களுக்காகக் கொடுத்த னுப்பிய மடல்.

**மன்னர்:** (மகிழ்ச்சிப் பெருக்குடன்) புதிதாகத் தோன்றியுள்ளதாகச் சொன்னார்களே அந்த நபிகளார் கொடுத்தனுப்பிய மடலா இது? கொடுங்கள், கொடுங்கள்! என்ன எழுதியிருக்கிறார்கள் என்று பார்க்க லாம்! என்று கூறியவண்ணம், மடலை மிகுந்த மரியாதையுடன் பெற்றுக் கொண்டு கண்களில் வைத்து ஒத்திக் கொள்கிறார். பிறகு தமது மொழி பெயர்ப்பாளரை அழைத்து மடலைக்கொடுத்து அதை வாசிக்கச் சொல் கிறார். அதில் எழுதப்பட்டிருந்தது:

**அல்லாஹ்வின் அடியாரும் அவனுடைய தூதருமான முஹம்மது, ஹபஷாவின் மன்னர் நஜாஷிக்கு எழுதிக் கொள்வது, எவர்கள் நேர் வழியைப் பின்பற்றினார்களோ மேலும் அல்லாஹ்வின் மீதும் அவனுடைய தூதர் மீதும் நம்பிக்கை கொண்டார்களோ அவர்கள் மீது சாந்தி நிலவட்டுமாக!**

**இணைதுணை இல்லாத ஏக இறைவனாகிய அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாரும் இல்லை என்றும் அவன் தனக்கு மனைவி என்றோ மகன் என்றோ யாரையும் ஏற்படுத்திக் கொள்ள வில்லை என்றும் முஹம்மது, அல்லாஹ்வின் அடியார், தூதர் என்றும் நான் சாட்சியம் கூறுகிறேன்.**

**<u>இஸ்லாத்தைத் தழுவுமாறு நான் உமக்கு அழைப்பு விடுக்கிறேன்.</u> ஏனெனில் நான் இஸ்லாத்தின் தூதர் ஆவேன். எனவே நீர் இஸ்லாத்தை ஏற்பீராக! ஈடேற்றம் பெறுவீர்.**

**வேதம் வழங்கப்பட்டவர்களே! எங்களுக்கும் உங்களுக்கும் மத்தியில் பொதுவாக உள்ள ஒரு விஷயத்தின் பக்கம் வாருங்கள். (அதாவது) அல்லாஹ்வைத் தவிர வேறு எவரையும் நாம் வணங்கக் கூடாது. மேலும் அல்லாஹ்வை விடுத்து நம்மில் சிலர் சிலரைக் கடவு ளாக ஆக்கிக்கொள்ளக் கூடாது. நீங்கள் எற்க மறுத்தால் நிச்சயமாக நாங்கள் முஸ்லிம்களாக இருக்கிறோம் என்பதற்கு நீங்கள் சாட்சியாக இருங்கள் (திருக்குர்ஆனின் வசனங்கள்)**

**இந்த அழைப்பை நீர் ஏற்க மறுத்தால் உமது கிறிஸ்தவ மக்களின் பாவமும் உம்மீதே வந்து விடியும்!**

**மன்னர்:** (அதிகாரிகளை நோக்கி) மக்காவிலிருந்து இங்கு வந்து தங்கியிருக்கும் ஜஃ்பரையும் அவருடன் உள்ள முஸ்லிம்களையும் தர்பாருக்கு அழைத்து வாருங்கள்.

(அதிகாரிகள் ஜாஃபரையும் அவருடைய தோழர்களையும் மன்ன ரின் தர்பாருக்கு அழைத்து வருகிறார்கள்)

**மன்னர்:** ஜஃ்.:பர் (ரலி) அவர்களையும் அவர்களின் தோழர்களையும் மிகுந்த மரியாதையுடன் வரவேற்று தர்பாரில் அமரச் செய்கிறார்.

(ஆரம்ப காலத்தில் ஹபஷாவில் வந்து குடியேறிய அந்த முஸ்லிம்கள் அம்ர் பின் உமைய்யா(ரலி) அவர் களைக் கண்டதும் பெரிதும் ஆனந்தம் அடைகிறார்கள். அவர்கள் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை! எல்லோரும் அம்ர் பின் உமையா ளம்ரி(ரலி) அவர்களுக்கு ஸலாம் கூறி ஆரத்தழுவி மகிழ்ச்சியைப் பரிமாறிக் கொள்கிறார்கள். மதீனாவின் நிலவரங்களை, நபி (ஸல்)அவர்கள் மற்றும் தோழர்களின் சேம நலன்களையும் விசாரிக்கிறார்கள்)

**மன்னர்:** (அம்ர் பின் உமைய்யா ளமரி (ரலி) அவர்கள், அண்ணல் நபிகளார் (ஸல்) அவர்களின் அழைப்பு மடலைக் கொண்டுவந்த விவரத்தை ஜஃ்.:பர் பின் அபீ தாலிப் (ரலி) அவர்களுக்கும் பிற முஸ்லிம்களுக்கும் மன்னர் எடுத்துக்கூறுகிறார்)

ஜஃ்.:பர் அவர்களே! இதோ! உங்கள் தோழர் திருமதீனாவில் இருந்து வந்திருக்கிறார். முஹம்மது நபியிடம் இருந்து எனக்கு ஓர் மடலையும் கொண்டு வந்திருக்கிறார். இஸ்லாத்தைத் தழுவுமாறு எனக்கு நபி(ஸல்) அவர்கள் அழைப்பு விடுத்திருக்கிறார்கள்! அதைத் தெரிவிப்பதற்காகத்தான் உங்கள் அனைவரையும் அழைத் திருக்கிறேன்.

(பிறகு கிறிஸ்த மதத்தின் துறவிகளையும் பாதிரிமார்களையும் அழைத்து வருமாறு மன்னர் ஆணையிடு கிறார்., அவ்வாறே அவர்கள் அனைவரும் தர்பாரில் வந்து அமர்கிறார்கள்)

**மன்னர்:** (அவர்கள் எல்லோருக்கும் அம்ர் பின் உமைய்யா கொண்டு வந்த அழைப்பு மடலை வாசித்துக் காட்டுகிறார்...

பிறகு ஜஅ்.:பர் (ரலி) அவர்களை நோக்கி கூறுகிறார்: ஏசு நாதர் (ஈஸா நபியவர்களைப் பற்றி உங்கள் வேதத்தில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது, அல்லவா? அப்படிப்பட்ட வசனங்களை இங்கு கூடியிருக்கும் எல்லோ ருக்கும் மீண்டும் ஒருமுறை இங்கே ஓதிக் காண்பியுங்கள்!

**ஜா.:பர் (ரலி) அவர்கள்:** குர்ஆனின் 19 வது அத்தியாயமாகிய மர்யம் அத்தியாயத்தை ஆரம்பித்து ஓதத் தொடங்கினார்கள்:

**அளவிலாக் கருணையும் நிகரிலாக் கிருபையும் உடைய அல்லாஹ்வின் திருப்பெயரால்! கா.:ப், ஹா, யா, ஐன், ஸாத். உம் இறைவன் தன் அடியார் ஜகரிய்யா மீது பொழிந்த அருளைப் பற்றிய செய்தியாகும் இது ...** என்று முதல் வசனம் தொடங்கி -

**...(அப்பொழுது) நாம் அவரிடம் நமது ரூஹை (வானவரை) அனுப்பினோம். அவர் மர்யத்தின் முன் முழு மனித வடிவில் தோன்றினார்.**

**உடனே மர்யம் கூறினார்: உம்மை விட்டும் கருணை மிக்க இறைவனிடம் நான் பாதுகாப்புத் தேடுகிறேன், நீர் இறையச்சம் உடைய வராயின்! அதற்கு அவர் கூறினார்: நான் உம் இறைவனின் தூதர் ஆவேன். தூய்மையான ஓர் ஆண் குழந்தையை உமக்கு வழங்கு வதற்காக நான் அனுப்பப்பட்டுள்ளேன்.**

**மர்யம் கூறினார்: எனக்கு எவ்வாறு ஆண் குழந்தை பிறக்கும்? என்னை எந்த மனிதனும் தீண்டவில்லையே! நான் தீய நடத்தை யுடையவளும் அல்லவே.**

**அதற்கு வானவர் கூறினார்: அவ்வாறே நிகழும்! (அது பற்றி) உம் இறைவன் கூறுகிறான்: அவ்வாறு (பிறக்கச்) செய்வது எனக்கு மிகவும் எளிதானது. மேலும் நாம் அக்குழந்தையை மக்களுக்கு ஒரு சான்றா கவும் நம்மிடமிருந்து ஒரு கருணையாகவும் ஆக்குவதற்காகத்தான் இவ்வாறு செய்கிறோம். அது நடந்தே தீரும்...**

**...அப்போது மர்யம், குழந்தை (ஏசுநாதர்) பக்கம் சைக்கினை செய்தார். அதற்கு மக்கள் கேட்டார்கள்:**

**தொட்டிலில் இருக்கும் குழந்தையிடம் நாங்கள் எப்படிப் பேசுவது? உடனே குழந்தை(யாக இருந்த ஏசு நாதர்) பேசியதாவது: நான் அல்லாஹ்வின் அடிமை. அவன் எனக்கு வேதம் வழங்கினான். என்னைத் தூதராக வும் ஆக்கினான். நான் எங்கிருந்தாலும் என்னைப் பெரும் பாக்கியம் உடையவனாக அக்கினான்.**

**மேலும் நான் உயிருடன் இருக்கும் காலம் வரையில் தொழுகையை நிறைவேற்றுமாறும் ஜகாத் கொடுக்கு மாறும் எனக்குக் கட்டளையிட்டிருக்கிறான். மேலும் என் தாயாரின் கடமையை நிறைவேற்றுபவனாகவும் என்னை ஆக்கினான். முரடனாக - துர்ப்பாக்கியம் உடையவனாக என்னை ஆக்கவில்லை. நான் பிறந்த நாளிலும் மரணிக் கும் நாளிலும் உயிரோடு மீண்டும் எழுப்பப்படும் (மறுமை) நாளிலும் என் மீது சாந்தி உண்டாகட்டும்!...** 29 -30 ஆம் வசனங்கள் வரை அப்படியே தொடர்ந்து ஓதியபோது அமைதியாக அவற்றைச் செவியேற்றுக்கொண்டிருந்த மன்னர் நஜாஷியும் அங்கு கூடியிருந்த கிறிஸ்தவத் துறவிகளும் பாதிரிமார்களும் தேம்பித்தேம்பி அழ ஆரம் பித்து விட்டனர் ...

**மன்னர்:** (சிம்மாசனத்தை விட்டும் உடனே கீழே இறங்கி தரையில் உட்கார்ந்து கொண்டு) ஜஅ்ஃபர் அவர்களே! இங்கே வந்து என் முன்னால் அமருங்கள்.

**ஜாஅஃபர்:** மன்னரின் அருகே தரையில் அமர்கிறார்கள்.

**மன்னர்:** நான் முஹம்மது நபியின் தூதுத்துவத்தை ஏற்றுக் கொண்டு இப்போதே இஸ்லாத்தில் இணைய விரும்புகிறேன். நான் என்ன கொள்கையை ஏற்க வேண்டும்? என்ன உறுதி மொழி தர வேண்டும் என்பதை எனக்குச் சொல்லுங்கள். அது தொடர்பாக எனக்குச் சொல்லித் தாருங்கள்!

**ஜஅஃபர் (ரலி) அவர்கள்:** குல் அஷ்ஹது அ(ன்ல்)லா இலாஹ இல்லல்லாஹு வ அஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வ ரஸூலுஹு வ அன்ன ஈஸா அப்துல்லாஹி வ ரஸூலுஹு வ கலிமத்துன் அல்காஹா இலா மர்யம வ ரூஹு (ன்ம்) மின்ஹு

அவ்வாறே நஜாஷி மன்னர் ஒவ்வொரு வார்த்தையையும் தெளி வாகத் திரும்பச் சொல்கிறார்.

(பொருள்: சொல்லுங்கள், வணக்கத்திற்குரிய இறைவன் அல்லாஹ் வைத் தவிர வேறுயாருமில்லை., மேலும் முஹம்மது நபி, அல்லாஹ்வின் அடியார்.,தூதர் என்று உளப்பூர்வமாக ஏற்று உறுதிமொழி கூறுகிறேன். மேலும் ஈஸா நபி, அல்லாஹ்வின் அடியார்., தூதர்., மர்யமிடம் அல்லாஹ் அனுப்பிய வாக்கு., அவனது கட்டளை யினால் ஊதப்பட்ட உயிர் என்றும் உளப்பூர்வமாக ஏற்று உறுதிமொழி கூறுகிறேன்)

- நஜாஷி மன்னர் அஸ்ஹமா அவர்கள், இவ்வாறு இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கைக் கோட்பாடுகளை உளப்பூர்வமாக ஏற்று உறுதிமொழி கூறி, நான் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டேன் எனப் பிரகடனம் செய்தார்.

- முற்றும் -

# அண்ணல் நபி (ஸல்) அவர்கள் பாரசீக மன்னருக்கு எழுதிய அழைப்பு மடலின் பின்னணியில் ... )

## காட்சி 1

## பங்கு பெறுவோர்

**நபி (ஸல்) அவர்கள், அப்துல்லாஹ் பின் ஹு தாஃபா (ரலி) மற்றும் நபித்தோழர்கள் பலர், பாரசீக மன்னன், அவனது அரசவைப் பிரதானிகள்**

**(பின்னணிக் குரல்: அண்ணல் நபி(ஸல்)அவர்கள், இஸ்லாத்தை ஏற்குமாறு பிறநாட்டு மன்னர்களுக்கு அழைப்பு விடுக்கத் திட்டமிட்டு, அதனைத் தம் தோழர்கள் மூலம் செயல்படுத்த முடிவு செய்தபோது, அது எவ்வளவு சிரமமான காரியம் என்பதையும் சரியாகக் கணித்தே இருந்தார்கள்.**

**ஏனெனில் சில நாடுகள் தூரமானவை., நபித்தோழர்களுக்கு முன்பின் அறிமுகமில்லாதவை., முன்னெப் போதும் அவர்கள் அங்கு சென்றதில்லை. அவர்களுக்கு, அந்நாட்டு மக்கள் பேசும் மொழியும் புரியாது. மன்னர்களின் மனநிலையும் தெரியாது!**

**அதுவும் பாரசீக மன்னனிடம் போய் சொல்வதென்றால் அது மிகவும் பாரதூரமான காரியம்! ஏனெனில் அன்றைய உலகில் ரோமாபுரியைப் போல பாரசீகமும் வல்லரசாகத் திகழ்ந்தது. அப்படிப்பட்ட வலிமை மிக்க நாட்டின் ஆட்சியாளரிடம் சென்று - உமது பழைய மதத்தை மறந்து விடும்., புதிய மார்க்கத்தில் இணைந்து விடும் என்று அழைக்க வேண்டுமெனில், அதுவும் அவரது ஆட்சிக்கு கட்டுப்பட்டிருந்த கூட்டத்தினரின் மதத்தை ஏற்குமாறு சொல்வ தெனில் அது எளிதான காரியமா, என்ன?**

**... பாதை கரடுமுரடானது. பயணம் பயங்கரமானது. சென்றவர் சென்றவர்தான்., திரும்பி வந்தால் அவர் புதுப்பிறவிதான் ...**

**பிறகு அண்ணல் நபி(ஸல்) அவர்கள் என்னதான் செய்தார்கள்? அவர்களின் அன்புத் தோழர்கள் அந்தக் கடமையை எப்படி நிறைவேற்றினார்கள்? அந்த வழியில் அவர்கள் சந்தித்த கஷ்டங்கள் என்ன? செய்த தியாகங்கள் என்ன? ... அழைப்புப் பணியின் வரலாற்றில் ஓர் மைல்கல்லாகத் திகழும் அந்நிகழ்ச்சிகள்தான் காட்சிச் சித்திரங்களாக ... இதோ! உங்கள் கண்கள் முன்னே ...)**

(அன்றொரு நாள் அண்ணல் நபி(ஸல்) அவர்கள் அன்புத் தோழர்கள் அனைவரையும் மதீனத்துப் பள்ளி வாசலில் ஒன்றுதிரட்டி எல்லோரையும் அமரச்செய்து சிறியதொரு சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். அப்பொழுது அழைப்புப் பணியில் ஆர்வமூட்டியவாறு ஒரு கருத்தை உறுதிபட எடுத்துரைத்தார்கள்.)

**நபி (ஸல்)அவர்கள்:** என் அன்புத் தோழர்களே! சத்திய இஸ்லாத்தின் தூதுச்செய்தியை - அந்நிய மொழி பேசும் நாடுகளின் மன்னர்களிடமும் அறிமுகப்படுத்தி சத்தியத்தை ஏற்குமாறு அவர்களையும் அழைத்திட வேண்டும். எனவே அந்நாடுகளுக்கு உங்களைத்தான் தூது அனுப்ப வேண்டும். என் சார்பாக இஸ்லாத்தின் அழைப்பை ஏந்திக்கொண்டு அந்நாட்டு மன்னர்களிடம் நீங்கள்தான் செல்ல வேண்டும். இதுவே எனது விருப்பம் ...!

என் அன்புக்குரிய தோழர்களே! நான் சொல்வதுபோல் செயல்படுவீர்கள் என்று பெரிதும் எதிர்பார்க்கிறேன்...நான் கட்டளையிடும் காரியங்களில் எனக்கு முரண்படாதீர்கள். பனூ இஸ்ராயீல் சமுதா யத்தினர் மர்யத்தின் குமாரர் ஈசாவிடம் முரண்பட்டு நடந்தது போல் நீங்கள் செய்யாதீர்கள்!

**தோழர்களில் ஒருவர்:** அல்லாஹ்வின் தூதரே! உங்களையும் நீங்கள் கொண்டு வந்துள்ள சத்திய இஸ்லாத்தையும் எங்கள் உயிரினும் மேலாக நாங்கள் நேசிக்கிறோம். உங்களோடு சேர்ந்து -அல்லாஹ்வின் மார்க்கத்தின் பால் மக்களை அழைப்பதும் அதற் காக உழைப்பதும்தான் எங்கள் வாழ்வின் இலட்சியம்! இப்போதும் சரி, இனி எப்போதும் சரி, இந்தக் கடமையை நிறைவேற்றுவதில் நாங்கள் பின்தங்கமாட்டோம். இது உறுதி!

எனவே நீங்கள் விரும்பும் நாடுகளுக்கு எங்களைத் தாராளமாக அனுப்பி வையுங்கள். அழைப்புப் பணிக்காக எந்த நாடுகளுக் குச் செல்ல வேண்டும் என்று நீங்கள் பணித்தாலும் செல்வதற்கு நாங்கள் தயார். அல்லாஹ்வுக்கு மிகவும் உவப்பான இந்தக் கடமையை - பாக்கியமிக்க இந்தப் பணியை நிறைவேற்றுமாறு எங்களுக் குக் கட்டளையிடுவதில் உங்களுக்கு எந்தத் தயக்கமும் வேண்டாம்.

**நபி (ஸல்) அவர்கள்:** (அன்புத் தோழர்கள் அளித்த இந்த உறுதியான பதிலைக் கேட்டதும் அகமகிழ்ந்தார்கள். உடனே எழுத்தரை அழைத்து அழைப்புக் கடிதம் ஒன்றை எழுதச்சொல்கிறார்கள்) நான் சொல்வது போல் எழுதும். பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம், **மின் முஹம்மதிர் ரசூலில்லாஹி இலா கிஸ்ரா அழீமி ஃபாரிஸ்..**

بسم الله الرحمن الرحيم ، من محمد رسول الله الى كسرى عظيم فارس ، سلام على من اتبع الهدىوآمن بالله ورسوله وشهد ان لا اله الا الله وان محمدا عبده ورسوله ، و اني ادعوك بدعاء الله و اني رسول الله الى الناس كافة لأنذر من كان حيا و يحق القول على الكـــافرين فأسلم تسلم ، وان توليت فان اثم المجوس عليك

محمد رسول الله

(الختم النبوي)

பொருள்: அளவிலாக் கருணையும் இணையிலாக் கிருபையும் உடைய அல்லாஹ்வின் திருப்பெயரால் ...! **அல்லாஹ்வின் தூதராகிய முஹம்மது,** ஃபாரசீகத்தின் மரியாதைக்குரிய மன்னருக்கு எழுதுவது என்னவெனில், எவர் நேர்வழியைப் பின்பற்றினாரோ, அல்லாஹ்வின் மீதும் அவனுடைய தூதர் மீதும் நம்பிக்கை கொண்டாரோ, மேலும் அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரிய இறை வன் வேறில்லை என்றும் முஹம்மது நபி, அல்லாஹ்வின் அடியார், தூதர் என்றும் உறுதிமொழி ஏற்றாரோ அப்படிப்பட்டவர் மீது சாந்தி யும் ஈடேற்றமும் உண்டாகட்டுமாக! அல்லாஹ்வுடைய அழைப்பின் அடிப்படையில் நான் உம்மை (இஸ்லாத்தில் சேருமாறு) அழைக்கிறேன். மேலும் நிச்சயமாக நான், மக்கள் அனைவருக்காகவும் அனுப்பப்பட்ட இறைத்தூதர் ஆவேன். (எனது தூதுத்துவம்) எதற்காகவெனில், உயிர் வாழும் மனிதர்கள் அனைவரையும் எச்சரிக்கை செய்வதற்காகவும் நிராகரிப்பவர்களுக்கு எதிரான ஆதாரம் நிறைவு பெறுவதற்காகவும்தான்! எனவே நீர் இஸ்லாத்தை ஏற்பீராக., ஈடேற்றம் பெறுவீர். (இதனை) நீர் புறக்கணித்தால் அக்கினி ஆராதனை செய்யும் அனைவரின் பாவமும் உம்மீதே வந்து விடியும்!

அல்லாஹ்வின் தூதர் முஹம்மது
(கையொப்ப முத்திரை)

(மடலை முறையாக -முழுமையாக எழுதி முடித்ததும் நபி(ஸல்) அவர்கள், அப்துல்லாஹ் பின் ஹு தாஃபா எனும் தோழரை அழைக் கிறார்கள்)

**நபி (ஸல்) அவர்கள்:** அப்துல்லாஹ் பின் ஹு தாஃபாவே! இங்கே வாரும்.

**அப்துல்லாஹ் பின் ஹு தாஃபா:** (நபியவர்களின் அருகில் வந்து) அல்லாஹ்வின் தூதரே! ஆணையிடுங்கள், அடிபணியக் காத்திருக் கிறேன்.

**நபி (ஸல்) அவர்கள்:** இது பாரசீக மன்னனுக்காக எழுதப்பட்ட அழைப்பு மடல். இதனை எடுத்துக்கொண்டு இப்போதே நேராக பாரீசகம் சென்று மன்னின் கையில் ஒப்படைத்து விட்டு வாரும்!

**அப்துல்லாஹ் பின் ஹு தாஃபா (ரலி):** ( அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் இருந்து கடிதத்தைப் பணிவோடு பெற்றுக் கொண்டு) அல்லாஹ்வின் தூதரே! உங்களின் ஆணைப்படியே செய்கிறேன். உங்களது ஆணையை நிறைவேற்றுவதே உலகில் நான் பிறந்ததன் இலட்சியம்!

**(உடனே அப்துல்லாஹ் பின் ஹு தாஃபா (ரலி) அவர்கள் பாரசீகப் பயணத்திற்கு ஏற்பாடு செய்யத் தொடங்கினார். உயர்ரகக் குதிரை ஒன்றைத் தயார் செய்ததும், மனைவி - மக்களிடம் சென்று முறையாகப் பயணம் சொல்லி விடைபெறுகிறார். தன்னந்தனியாகத்தான் ... ஆனாலும் அல்லாஹ்வின் உதவியை வழித்துணைச் சாதனமாக்கிக்**

**கொண்டு துணிவுடன் புறப்பட்டார்! ...கொதிக்கும் வெயிலையும் பாலை மணற்பரப்பில் தனலாய்த் தகித்தும் வெப்பத்தையும் தாங்கிக்கொண்டு... கரடு முரடான பாதைகளையும் மேடு பள்ளங்களையும் பவ்வியமாகக் கடந்து ஒருவாரா கப் பாரசீக நாட்டில் கால் பதித்தார் ...)**

**அப்துல்லாஹ் பின் ஹு தா∴பா:** (தர்பாரின் காவலர்களிடம்) நான் அரேபியா தேசத்தில் இருந்து வருகிறேன். உங்கள் நாட்டு மன்னரைச் சந்திக்க வேண்டும். எங்கள் முஹம்மது நபி (ஸல்) அவர்கள், உங்கள் மன்னருக்கு எழுதிய மடல் ஒன்றும் என்னிடம் உள்ளது அதனை அவரிடம் ஒப்படைப்பதற்காகவே இங்கு வந்திருக்கிறேன்.

**தர்பாரின் காவலர்கள்:** (மன்னரிடம் வந்து) மன்னர் அவர்களே! உங்களைச் சந்திப்பதற்காக ஒருவர் வந்திருக்கிறார் ...

**மன்னன்:** யார் அவர்? எங்கிருந்து வருகிறார்? என்ன விஷயம்?

**தர்பாரின் காவலர்கள்:** அரேபிய தேசத்தில் இருந்து வருகிறாராம்.. உங்களுக்காக ஒரு கடிதமும் கொண்டு வந்திருக்கிறார்.

**மன்னன்:** எனக்குக் கடிதம் கொண்டு வந்திருக்கிறாரா? யார் எழுதி அனுப்பியது?

**தர்பாரின் காவலர்கள்:** அவர்களுடைய முஹம்மது நபி எழுதியது என்று கூறுகிறார்.

**மன்னன்:** (அதிகாரிகளுக்கு ஆணையிட்டான்:) தர்பாரை அழகு படுத்துங்கள். எல்லா இடங்களிலும் மஞ்சள் நிறப்பட்டாடைகளை விரித்து சாய்வு இருக்கைகளையும் மெத்தைகளையும் போட்டு நன்றாக அலங்கரியுங்கள். அரசவைப் பிரதானிகளையும் நமது தேசத்தின் முக்கியஸ்தர்களையும் அழைத்து வந்து தர்பாரில் அமரச் செய்யுங்கள்.

(எல்லாப் பிரமுகர்களும் தர்பாரில் வந்தமர்ந்த பிறகு, அப்துல் லாஹ் பின் ஹு தா∴பா (ரலி) அவர்களுக்கு உள்ளே வர அனுமதி அளிக்கப்பட்டது)

- திரை விழுகிறது -

## காட்சி 2

### பங்கு பெறுவோர்

**அப்துல்லாஹ் பின் ஹு தா∴பா, பாரசீக மன்னன் குஸ்ரு பர்வேஸ், அவனுடைய அரசவைப் பிரதானிகள், ஏமனின் ஆளுநர் பாதான், அவனது இரு அடியாட்கள், மற்றும் அரசவைப் பிரமுகர்கள்.**

**(பின்னணிக் குரல்: அரேபிய தீபகற்பத்தின் தெற்கில் பெரும் பகுதிகளை பாரசீகர்கள் கைப்பற்றி இருந் தார்கள். இதேபோல் வடக்கில் பெரும் பகுதிகளை ரோமானியர்கள் கைப்பற்றி இருந்தார்கள்.**

**பாரசீகர்கள் ஆக்கிரமித்திருந்த மாகாணங்களில் பெரும்பாலும் பார்சி மதம் பரவியிருந்தது. ரோமானியர்கள் ஆக்கிரமித்திருந்த மாகாணங்களில் பெரும்பாலும் கிறிஸ்தவ மதம் பரவியிருந்தது. தத்தமது ஆக்கிரமிப்பு மாகாணங்களின் அமீர்களாக - ஆளுநர் களாக ஆக்கிரமிப்பாளர்களே தம் ஆட்களை நியமித்திருந்தார்கள்.**

**அன்றைய பாரசீகம் என்பது, இன்றைய ஈரான், ஈராக்கின் சில பகுதிகளையும் உள்ளடக்கி, ஆப்கானிஸ்தான் வரை பரவியிருந்தது. பாக்தாதின் தென்பகுதியில் தஜ்லா (dycrees) நதியின் கிழக்கு மற்றும் மேற்கு கரையில் பிரமாண்டமான அரச மாளிகைகளுடன் அமைந்திருந்த மதாயின்தான் அதன் தலைநகர்! இத்தகைய பரந்து விரிந்த பாரசீகத்தை சாசானிய மன்னர்கள் ஆண்டு வந்தனர்.**

**பாரசீகத்தின் முதல் மன்னன் அஸ்தஷேர் பின் பாடக் ஆவான். இந்த மன்னன்தான், மகா அலெக்சாண்டர் ஆட்சிக்காலத்தில் சிதறிப்போன பாரசீகப் பகுதிகளை இரண்டாவது முறையாக ஒரே ஆட்சியின் கீழ் கொண்டு வந்தான்.**

**இந்த மன்னனுக்குப் பிறகு இவனுடைய புதல்வர்களே ஆட்சியில் தொடர்ந்தார்கள். அவர்களில் ஒருவர்தான் அனூஷர்வான் என்ற மன்னன்.அனூஷர்வான், அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தோன்றிய கால கட்டத்தில் பிறந்தவன்.**

**இதற்குப் பிறகு மன்னன் ஹு ர்முஸ் என்பவனும் அதன் பிறகு அவனுடைய மகன் அபர்வேஸு ம் ஆட்சிக்கு வந்தார்கள். இஸ்லாத் தில் சேருமாறு அழைத்து நபி (ஸல்) அவர்கள் அழைப்பு மடல் அனுப்பியது இந்த அபர்வேஸ் மன்னனுக்குத்தான். குஸ்ரு பர்வேஸ் என்றும் இவனுக்குச் சொல்வதுண்டு.**

**நபி (ஸல்)அனுப்பிய அழைப்பு மடல், பாரசீக மன்னனின் தர்பாரில் என்ன பாதிப்பை ஏற்படுத்தியது? சீறா எனும் நபிவரலாற்றில் முக்கியமான பல திருப்பங்களுக்கு அடித்தளமாக அமைந்த அந்தக் காட்சிகள்தான் இதோ! உங்கள் முன்னே உங்கள் முன்னே, உங்கள் கருத்துக்கும் காட்சிக்கும் விருந்தாக!)**

(அப்துல்லாஹ் பின் ஹு தா∴பா (ரலி) அவர்கள் பாரசீக மன்ன னின் தர்பாரில் நுழைகிறார். சாதாரணமான முரட்டு ஆடை ஒன்றை அணிந்துகொண்டு, மெல்லிய சால்வை ஒன்றை உடலைச் சுற்றிப் போர்த்திக்கொண்டு அரபுகளுக்கே உரிய எளிய தோற்றத்தில் ... ஆனால் இஸ்லாத்தின் கண்ணியம் நெஞ்சில் நிறைந்திருக்க, ஈமானின் கௌரவம் இதயத்தில் சுடர்விட்டுப் பிரகாசிக்க ... கன கம்பீரத்துடன் உள்ளே செல்கிறார்)

**பாரசீக மன்னன் குஸ்ரூ பர்வேஸ்:** (அப்துல்லாஹ் பின் ஹு தா∴பாவின் கம்பீரமான வருகையைக் கண்டதும் ... தன்னருகே அவர் வருவதை மன்னன் விரும்பாததுபோல் தர்பாரின் காவலர் ஒருவரிடம்) அவரது கையில் உள்ள கடிதத்தை நீயே வாங்கிக்கொண்டு வா என்று சைக்கினை செய்தான்!

**அப்துல்லாஹ் பின் ஹு தா∴பா:** (கடிதத்தைத் தன்னிடம் கொடுக்கும்படி கேட்ட காவலரிடம் ...) முடியாது, கடிதத்தை நானே மன்னனிடமே நேரடியாக கொடுக்க வேண்டும் என்றுதான் எங்கள் நபி (ஸல்) அவர்கள் எனக்குக் கட்டளையிட்டுள்ளார்கள். எனவே கடிதத்தை வேறு யாரிடமும் நான் கொடுக்க மாட்டேன் ... மன்னரிடம் நானேதான் கொடுப்பேன்.

**பாரசீக மன்னன்:** (அப்துல்லாஹ் பின் ஹு தா∴பா (ரலி) கடிதத்தைக் கொடுக்க மறுத்ததைக் கவனித்த வாறு) அப்படியா! சரி, அவரை என் அருகில் வர விடுங்கள்.

(அப்துல்லாஹ் பின் ஹு தா∴பா (ரலி)அவர்கள் மன்னனின் அருகே சென்று கடிதத்தைக் கொடுக்கிறார்)

**பாரசீக மன்னன்:** (கடிதத்தைப் பெற்றுக்கொண்டு ஹீரா என்ற பாரசீகத்தின் புகழ்மிக்க பெருநகரைச் சேர்ந்த அரபிமொழிபெயர்ப்பாளர் ஒருவரை அழைத்து) இந்தக் கடிதத்தை என் முன்னிலையில் பிரித்து எனக்கு வாசித்துக் காட்டும்.

**மொழிபெயர்ப்பாளர்:** (அரபி மொழியில் எழுதப்பட்டிருந்த கடிதத் தைப் படித்து பார்சிமொழியில் விளக்கிச் சொல்லத் தொடங்கினார்) **இறைத்தூதர் முஹம்மது அவர்கள், பாரசீகத்தின் மரியாதைக்குரிய மன்னருக்கு** எழுதிக்கொள்வது என்னவெனில் ...

**(இவ்வாறு ஆரம்ப வரிகளை வாசித்துக் காட்டியதும் ... மன்னன் கோபத்தால் கொதித்தெழுந்தான். முகமெல்லாம் சிவக்க, கழுத்து நரம்புகள் எல்லாம் புடைத்து மேனியெல்லாம் குலுங்க ... நெஞ்சு படபடக்க ... மன்னனுக்கு மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்கியது ...)**

**பாரசீக மன்னன்:** (பெரும் கூச்சல் போட்டவனாக மொழி பெயர்ப்பாளரின் கையில் இருந்த கடிதத்தைப் பிடுங்கிக் கிழித்து எறிந்தான். அதிலே என்ன செய்திதான் எழுதப்பட்டுள்ளது என்பதைக் கூட தெரிந்து கொள்ள ஆர்வமில்லாமல் ... ஆவேசத்துடன் கர்ஜித்தான்) என்ன கடிதம் இது? யார் இப்படி அவமரியாதை யாக எழுதியது? யார் அந்த முஹம்மது நபி? எனக்கு அடிமைப்பட்டு, எனது தயவில் வாழக்கூடிய கூட்டத் தைச் சேர்ந்த ஒருவர் - இப்படி ஒரு கடிதத்தை எனக்கு எப்படி எழுதினார்?

இந்தத் துணிவு அவருக்கு எப்படி வந்தது? அவருக்கு யார் தைரியம் கொடுத்தது? **முதலில் அவரது பெயர், அதன் பிறகு எனது பெயரா? ...** என்ன விந்தை இது? இப்படியொரு அவமரியாதையா எனக்கு? நினைக்கவே இரத்தம் கொதிக்கிறது! என்ன கேவலம் இது? எனது நாட்டில் என்ன நடந்து கொண்டிருக் கிறது, என்னைச் சுற்றி எப்படிப்பட்ட கருத்து எழுப்பப்படுகிறது என்பது எனக்குத் தெரிந்தாக வேண்டும்? இந்த நாட்டில் எனக்கு எதிராக யாரோ சூழ்ச்சிவலை பின்னு கிறார்கள்! ... இப்படி அவமரியாதையாக எழுதப்பட்ட கடிதத்தை அந்த அரேபிய மனிதன் எப்படி இங்கே கொண்டு வந்தான்? அவன் இங்கு இருப்பதே எனக்கு அவமானம் ... எனது தர்பாரில் - என் முன்னிலையில் ஒரு நிமிடம்கூட அவன் இருக்கக் கூடாது. உடனே அவனை வெளியேற்றுங்கள், இங்கிருந்து ...!

**(மன்னனின் கோபக் கர்ஜனைகளினால், ஆவேச அர்ச்சனைகளினால் தர்பாரே அரண்டுபோனது! அமைச்சர் களும் அரசவைப் பிரதானிகளும் அச்சம் கலந்த ஆச்சரியத்துடன் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் ... தர்பாரின் காவலர்கள் அப்துல்லாஹ் பின் ஹு தா∴பாவைப் பிடித்து அவசரமாக வெளியேற்றுகிறார்கள்.)**

**அப்துல்லாஹ் பின் ஹு தா∴பா(ரலி):** (தர்பாரில் இருந்து வெளியே வந்த வண்ணம் ...) என்னை என்ன செய்யப் போகிறார்களோ தெரியவில்லை! என்னை கைது செய்து கொன்று விடுவார்களா? அல்லது சுதந்திர கமாக விட்டு வைப்பார்ளா?... எதுவும் புரியவில்லை! என்ன செய்தாலும் சரிதான்! எதற்கும் நான் அஞ்சப் போவதில்லை! நபி (ஸல்) அவர்களின் அழைப்புக் கடிதத்தை உரிய முறையில் சேர்ப்பித்து விட்டேன். நபி (ஸல்) அவர்கள் பிறப்பித்த கட்டளையை நிறைவேற்றி விட்டேன். இனி என்ன நடந்தாலும் கவலை இல்லை!

(அப்துல்லாஹ் பின் ஹு தா∴பா,சுற்றும் முற்றும் பார்க்கிறார், யாரும் அவரைக் கவனித்துக் கொண்டிருக்க வில்லை... எல்லோரும் தர்பாரில் நடக்கும் கூத்துகளில்தான் கவனம் செலுத்துகிறார்கள் ... உடனே குதிரையில் ஏறி மதீனா நோக்கிப் புறப்படுகிறார்)

**பாரசீக மன்னன்:** (சற்று நேரத்தில் ... தலைக்கேறிய கோபம் தணியத் தொடங்கியது. கீழே தரையைப் பார்த்தவாறு ஏதோ சிந்தனையில் ...) கடிதம் கொண்டு வந்த அந்த அரபியை இங்கே கொண்டு வாருங்கள்.

(அதிகாரிகள் தர்பாருக்கு வெளியே வந்து அப்துல்லாஹ் பின் ஹு தா∴பா (ரலி) அவர்களைத் தேடுகிறார் கள். ஆனால் அவர் கிடைக்கவில்லை. அதிகாரிகள் பதற்றத்துடன் அங்கும் இங்கும் தேடுகிறார்கள். அரேபியா செல்லும் நெடுஞ்சாலைக்கு விரைந்து வந்து தேடிப்பார்க்கிறார்கள். குதிரை சென்ற தடங்கள் மட்டுமே இருந்தன. யாரையும் காணவில்லை. ஆனால் அப்துல்லாஹ்(ரலி) அவர்கள் அதற்கு முன்பே மதீனா நோக்கிப் புறப்பட்டு விட்டார்கள்)

**அதிகாரிகள்:** (திரும்பி வந்து) மன்னர் அவர்களே! எங்கு தேடியும் அந்த மனிதன் கிடைக்கவில்லை! அவர் அரேபியாவுக்கு புறப்பட்டிருக்கலாம்!

**பாரசீக மன்னன்:** (ஏதோ சிந்தனையில் ... எழுத்தரை அழைத்து, ஏமன் நாட்டின் ஆளுநரான பாதானுக்கு கடிதம் எழுதச் சொல் கிறான்) நான் சொல்வதுபோல் எழுதும்: பாரசீக மன்னன் அபர்வேஸ், ஏமன் மாகாண ஆளுநர் பாதானுக்கு எழுதிக்கொள்வது என்னவெனில், அரேபியா தேசத்தில் புதிதாகத் தோன்றியுள்ள - முஹம்மது நபி என்று சொல்லப்படுகிற இன்ன மனிதரைப் பிடித்து வந்து எனது தர்பாரில் ஆஜர்படுத்த ஏற்பாடு செய்யும். எனது ஆணையை எவ்வளவு சீக்கிரம் நிறைவேற்ற முடியுமோ அவ்வளவு சீக்கிரம் நிறை வேற்றி முடிக்குமாறு கட்டளையிடுகிறேன். துணிச்சல் மிக்க இரண்டு நபர்களை அரேபியாவுக்கு அனுப்பி வை! அவ்விரு வரும் அரேபியா நாடு சென்று உடனே அந்த மனிதரை கைது செய்து என்னிடம் கொண்டு வர வேண்டும். உடனே அதற்கான ஏற்பாட்டைச் செய்! என்னைப் பற்றி அவர் என்ன நினைத்துக் கொண்டி ருக்கிறார் என்பது எனக்குத் தெரிந்தாக வேண்டும்.

**(அரசாங்கத் தூதுவர், பாரசீக மன்னனின் கடிதத்துடன் புறப்பட்டார். ஏமன் நாட்டுக்கு வந்து ஆளுநர் பாதானிடம் அதை ஒப்ப டைக்கிறார்)**

**ஏமன் ஆளுநர் பாதான்:** (பாரசீக மன்னனின் கடிதத்தைப் படித்துப் பார்க்கிறார் ... பாரசீக மன்னன் ஏன் இவ்வளவு கோபமாக இருக்கிறான்? என்று கேட்டவாறு ...என்ன நடந்தது என்பது பற்றி எதுவும் தெரியாமல் வியப்புடன் கடிதத்தை மீண்டும் மீண்டும் படித்துப்பார்த்தவாறு ... கடிதத்தைக்கொண்டு வந்த அதிகாரியிடம்:) ஏன் மன்னர் இவ்வளவு கோபமாக இருக்கிறார்? என்ன நடந்தது, அங்கே ...?

**பாரசீக அதிகாரி:** அரேபியா தேசத்தில் இருந்து மன்னனுக்கு ஒரு கடிதம் வந்தது. அதைப் படித்துப் பார்த்த பிறகுதான் மன்னன் இவ்வாறு கோபமாக இருக்கிறார்!

**ஏமன் ஆளுநர் பாதான்:** ஏன்? மன்னருக்கு எரிச்சலூட்டும் வகையில் கடிதத்தில் அப்படி என்ன எழுதப் பட்டிருந்தது?

**பாரசீக அதிகாரி:** என்ன எழுதப்பட்டிருந்தது என்று தெரியவில்லை! ஆனால் கடிதத்தின் ஆரம்பமே அவமரியாதையாக இருந்ததாம்! மன்னனின் பெயரை முதலில் எழுதவில்லையாம் ...!

**ஏமன் ஆளுநர் பாதான்:** ஓகோ! அதற்காகத்தான் இவ்வளவு கோபமாக இருக்கிறானா?

(சிறிது நேரத்திற்குப் பிறகு எழுத்தரை அழைத்து சுருக்கமாக ஒரு கடிதம் எழுதச்சொல்கிறார் பாதான். வாட்டசாட்டமான இரு நபர்களை அழைத்து) நீங்கள் இருவரும் நேராக மதீனா சென்று முஹம்மது என்கிற அந்த மனிதரைச் சந்தித்து இந்தக் கடிதத்தைக் கொடுங்கள். பிறகு பாரசீக மன்னன் அவரைக் கைதுசெய்ய உத்தரவிட்டிருக்கும் செய்தியை முறையாகச் சொல்லுங்கள். பிறகு அவரைக் கைதுசெய்து இங்கே அழைத்துக் கொண்டு வாருங்கள்.

(அதன்படி ஏமன் நாட்டைச் சேர்ந்த அந்த அடியாட்கள் இருவரும் நபி (ஸல்)அவர்களைக் கைது செய்யும் எண்ணத்தில், பாரசீகத்திற்கு அழைத்துச் செல்லும் நோக்கத்தில் மதீனா வந்து சேருகிறார்கள்)

- திரை விழுகிறது -

## காட்சி 3

## பங்கு பெறுவோர்

**நபி (ஸல்) அவர்கள், அப்துல்லாஹ் பின் ஹு தா஡பா நபித் தோழர்கள் பலர், ஏமன் நாட்டு ஆளுநர் பாதான், அவனுடைய இரு அடியாட்கள் மற்றும் அரசவைப் பிரமுகர்கள்.**

**(பின்னணிக் குரல்: ஆட்சிபீடத்தில் அமரும் மனிதன், எல்லையில்லா அதிகாரத்தைப் பெற்றால், ஒன்று: சிந்தனை ரீதியில் பக்குவப்பட்டவனாக ... அதாவது, இறைநம்பிக்கையும் இறைவனுக்குப் பதில் சொல்ல வேண்டுமே என்கிற உண்மையான பொறுப்புணர்வும் அவனுக்கு இருக்க வேண்டும்.**

**ஆனாலும் ...அந்த இறைநம்பிக்கையும் பொறுப்புணர்வும் பலவீனப்பட்டுப் போகாதவாறு அவனது மனச் சாட்சியை உயிருள்ளதாக வைத்திருப்பதும் அவசியமாகும். அதற்கு வேண்டிய சிந்தனைப் பயிற்சியை அவன் தொடர்ந்து பெற்றுவரும் சூழ்நிலை இருக்க வேண்டும்.**

**அப்படிப்பட்ட சூழ்நிலையும் சீர்நிலையும் இல்லையென்றால் -நல்ல சிந்தனைப் பாங்கு அவனுக்குக் கிடைக்கப் பெறவில்லை என்றால், சமன்பாட்டை நிலைநிறுத்தக்கூடிய வேறோர் ஏற்பாடாவது இருப்பது அவசியம். அதாவது, அவன் தனது அதிகாரத்தை துஷ்பிரயோகம் செய்யத் துணியாத வகையில் அவனை நிதானப் படுத்தக்கூடிய இன்னொரு அதிகார மையம் இருக்க வேண்டும்.**

**அதுவுமில்லை இதுவுல்லையெனில் என்ன ஆகும்? அளவு கடந்த ஆணவம்தான் தலைக்கேறும் ... உலகில் பெரும் அராஜகமும் குழப்பமும் தலைவிரித்தாடத்தான் அது வழிவகுக்கும். இறுதியில் உலகம் அழிவையும் நாசத்தையுமே சந்திக்க வேண்டியது வரும்!**

**இன்றைய வல்லரசின் ஆட்சியிலும் இதைத்தான் காண்கிறோம். அப்பட்டமான ஆக்கிரமிப்புப் போர்கள், அன்றாட குண்டுவெடிப்புகள், உயிரிழப்புகள் ஆகியவை அவர்களின் அராஜகத்திற்குச் சாட்சியாக உள்ளன!**

**அன்றைய சர்வாதிகாரியின் ஆணவப்போக்கைத்தான் ... இங்கே காட்சிச் சித்திரங்களாக நீங்கள் கண்டு கொண்டிருக்கிறீர்கள்! இதோ! அகிலத்தின் அருட்கொடையாக அனுப்பப்பட்ட அண்ணல் நபி(ஸல்) அவர் களையே பிடித்து வர அடியாட்களை அனுப்புகிறான் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்...! பிறகு என்னதான் நடந்தது? அந்த அராஜகத்தின் கோரத்தாண்டவம் எப்படி அடக்கப்பட்டது? அந்தக் காட்சிகளையே தொடர்ந்து காணப்போகிறீர்கள்..!)**

(அப்துல்லாஹ் பின் ஹு தாஃபா (ரலி)அவர்கள் மதீனா வந்து சேருகிறார். பாரசீக மன்னன் நடந்துகொண்ட விதத்தை நபி (ஸல்) அவர்களிடமும் தோழர்களிடமும் விவரிக்கிறார்)

**அப்துல்லாஹ் பின் ஹு தாஃபா (ரலி):** (மதீனத்துப் பள்ளிவாசலில் நுழைந்தவர்களாக) அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ் ...!

(எல்லோரும் அலைக்குமுஸ் ஸலாம் ... என்று பதில் உரைத்து அப்துல்லாஹ் பின் ஹு தாஃபா (ரலி) அவர்களை மகிழ்ச்சி பொங்க வரவேற்கிறார்கள்)

**நபி (ஸல்) அவர்கள்:** வாருங்கள், தோழரே! மிகவும் சிரமமான ஆனாலும் பாக்கியம் நிறைந்த பணியொன்றை நிறைவேற்றி முடித்து விட்டுத் திரும்பியிருக்கிறீர்கள்! அல்லாஹ் உங்களுக்கு நற்கூலி வழங்குவானாக! ... சென்ற காரியத்தை இலகுவாக - சிறப்பாக நிறைவேற்றினீர்களா? ஏதேனும் சிரமங்கள் ஏற்பட்டனவா?

**அப்துல்லாஹ் பின் ஹு தாஃபா:** (நபியவர்களை நோக்கி பதற்றத்துடன்) அல்லாஹ்வின் தூதர் அவர்களே! தாங்கள் கொடுத்த மடலை பாரசீக மன்னனிடத்தில் ஒப்படைத்து விட்டேன் என்பது சரிதான்! ஆனால் அந்த மன்னன் நீங்கள் அனுப்பிய மடலை எவ்வளவு ஆணவத்துடன் பிடுங்கி கிழித்து எறிந்தான் தெரியுமா?

**நபி (ஸல்) அவர்கள்:** என்ன, எனது மடலைக் கிழித்து எறிந்தானா? ... அதில் எழுதப்பட்டிருந்த செய்திக்கு என்ன பதில் சொன்னான் ? அதைப் படித்துப் பார்த்தானா? இல்லையா?

**அப்துல்லாஹ் பின் ஹு தாஃபா:** மொழிபெயர்ப்பாளர் இரண்டொரு வார்த்தைகளை அவனுக்கு வாசித்துக் காட்டியதுமே கோபம் அவ னுக்குத் தலைக்கேறி விட்டது. உடனே மொழிபெயர்ப்பாளரின் கையில் இருந்து கடிதத்தைப் பிடுங்கி கிழித்து வீசிவிட்டான்! ...

(பள்ளிவாசலில் அமர்ந்திருந்த நபித்தோழர்கள் அனைவரும் அதிர்ச்சியும் கோபமும் அடைகிறார்கள். ஆவேசப் படுகிறார்கள்!)

**நபி (ஸல்) அவர்கள்:** (மிகவும் மனம் வருந்திய நிலையில்) அவனது ஆட்சியதிகாரத்தை அல்லாஹ் கிழித்து எறிவானாக! ...

**நபி (ஸல்) அவர்கள்:** (சிறிது நேர மௌனத்திற்குப் பிறகு) அது சரி, மன்னனின் தர்பாரில் அப்பொழுது என்ன நடந்தது? உங்க ளுக்கு ஏதேனும் தொல்லை கொடுத்தார்களா? அடித்துத் துன்புறுத் தினார்களா?

**அப்துல்லாஹ் பின் ஹு தாஃபா:** ஒரு நிமிடம்கூட தர்பாரில் நான் இருக்கக்கூடாது என்று மன்னன் கத்தி னான். உடனே காவலர்கள் என்னை வெளியேற்றி விட்டார்கள். ...வெளியில் வந்த நான் அப்படியே மதீனா நோக்கிப் புறப்பட்டு வந்துவிட்டேன் ...

**நபித்தோழர்களில் சிலர்:** அவ்வளவு ஆணவமா, அந்த மன்னனுக்கு! உலகின் செல்வச் செழிப்பும் சொகுசான வாழ்வும் வாழ்க்கைச் சாதனங்களும் அவனது காலடியில் கொட்டிக்கிடக்கிறது ...அது தான் காரணம்! ஆம்! அளவுக்கு அதிகமான அதிகாரம் அவனிடம் குவிந்து கிடப்பதால்தான் இவ்வளவு தலைக்கனம் அவனுக்கு! இதற்கு ஒரு முடிவு கட்டவேண்டும் ...இப்னு ஹு தைஃபாவே! நீங்கள் மன்னனின் பிடியில் மாட்டாமல் உடனே புறப்பட்டு வந்தது தான் நல்லது! இல்லையெனில் ...!

**அப்துல்லாஹ் பின் ஹு தாஃபா:** எது வந்தாலும் எதிர்கொள்ளத் தயார் எனும் முடிவுடன்தான் நான் இந்தப் பணியை நிறைவேற்றக் களம் இறங்கினேன். பாரசீக மன்னனிடம் அழைப்புக் கடிதத்தைக் கொடுத்துவிட்டேன். நபியவர்கள் பிறப்பித்த ஆணையை நிறை வேற்றி விட்டேன். கடமை முடிந்தது...அதற்குப் பிறகு நான் அங்கு இருக்க வேண்டிய அவசியம்தான் என்ன? அது மட்டுமல்ல...மன்னனின் தர்பாரில் நடந்த இந்தக் கூத்து களையெல்லாம் உங்களுக்கு தெரிவிக்க வேண்டுமே! அதற்காகவும்தான் ஓடோடி வந்தேன்!

**(அங்கே ...அந்த இரண்டு அடியாட்களும் உடனே மதீனா நோக்கிப் புறப்பட்டார்கள்..வழியில் தாயிப் நகருக்கு அவர்கள் வந்த போது அங்கே குறைஷி குலத்தைச் சேர்ந்த வியாபாரிகள் சிலரைச் சந்திக்கிறார்கள்)**

**பாதானின் ஆட்கள்:** (இவர்களைப் பார்த்தால் மக்கத்து குறைஷி கள் போல் தெரிகிறதே! முஹம்மது நபி என்பரைப் பற்றி இவர்களிடம் கேட்டால் சொல்வார்கள்தானே) நீங்கள் மக்கா வாசிகள் தானே? குறைஷி குலத்தைச் சேர்ந்தவர்கள்தானே!

**குறைஷி வியாபாரிகள்:** ஆமாம்! நாங்கள் மக்கத்து குறைஷிகள் தான்! எப்படி சரியாக அடையாளம் கண்டு கொண்டீர்கள்? சரி நீங்கள் யார்? எங்கிருந்து வருகிறீர்கள்?

**பாதானின் ஆட்கள்:** நாங்கள் ஏமன் தேசத்தில் இருந்து வருகிறோம். எங்கள் தேசத்து ஆளுநர் பாதான் எங்களை அனுப்பி வைத்திருக்கிறார். நாங்கள் முஹம்மது நபி என்பரை கைது செய்து பாரசீகத்திற்கு அழைத்துச் செல்ல வேண்டும். அதுதான் எங்களுக்கு இடப்பட்டிருக்கும் கட்டளை! நாங்கள் இப்பொழுது அந்த முஹம்மது நபியைச் சந்திக்கத்தான் செல்கிறோம். ... முஹம்மது நபியைப் பற்றி உங்களுக்கு ஏதேவது தெரியுமா? அவர் எங்கு இருக்கிறார்? அவரை எப்படி சந்திப்பது?

**குறைஷி வியாபாரிகள்:** ஓ அப்படியா சேதி! ... உங்களையும் உங்களது வாட்டசாட்டமான தோற்றத்தையும் பார்த்தபோது யாரையோ பிடிக்கச் செல்வதுபோன்றுதான் தெரிந்தது! அதுதான் உங்களிடம் விசாரித்தோம். அவர் ... அவர்தான் முஹம்மது நபி எங்கள் மக்கா நகரில் பிறந்தவர்தான்! எங்களது குறைஷி குலத்தைச் சேர்ந்தவர் தான்! ஆனால் எங்களுடனும் தகராறு செய்துகொண்டு சில ஆண்டு களுக்கு முன்பே அவர் யஸ்ரிப் என்று சொல்லபடும் மதீனா மாநகருக்குச் சென்று விட்டாரே ... நீங்கள் நேராக அந்த மதீனா நகருக் குச் சென்றால் அவரைச் சந்திக்கலாம்!
**பாதானின் ஆட்கள்:** சரியாகச் சொன்னீர்கள். மதீனா நகருக்குச் செல்லுமாறுதான் எங்களை அனுப்பியுள் ளார்கள்! முஹம்மது நபி பற்றி விவரத்தை - சரியான தகவலைச் சொன்னதற்காக உங்களுக்கு ரொம்ப நன்றி! நாங்கள் போய் வருகிறோம்.

- திரை விழுகிறது -

## காட்சி 4

## பங்கு பெறுவோர்

**பாதானின் இரண்டு அடியாட்கள், மக்கத்து வியாபாரிகள், குறைஷித் தலைவர்கள், நபி (ஸல்) அவர்கள், நபித்தோழர்கள் பலர்.**

**(பின்னணிக் குரல்: நபி (ஸல்) அவர்கள் அழைப்புப் பணியைத் தொடங்கியது முதல் ஒவ்வொரு கட்டத்திலும் இஸ்லாத்தின் ஒளியை எப்படியாவது ஊதி அணைத்திட எதிரிகள், கடும் முயற்சி மேற்கொண்டார்கள். இன்றைக்கும் அந்த முயற்சி நின்றபாடில்லை! ஆனால் அல்லாஹ் தனது ஒளியை முழுமையாக்கி இத்தரணி எங்கும் பிரகாசிக்கச் செய்து கொண்டே இருக்கிறான்!**

**இது நபியவர்களுக்கு அல்லாஹ் அளித்த வாக்குறுதி. அதன் அடிப்படையிலேயே அண்ணல் நபியவர்கள், இடர்சூழ்ந்த ஒவ்வொரு நேரத்திலும் - நிச்சயம் இந்த சத்திய இஸ்லாம் மேலோங்கியே தீரும் என்று நற்செய்தி அறிவித்துக் கொண்டே இருந்தார்கள்!**

**இதோ! அஹ்ஸாப் போரின்போது - மதீனாவின் பாதுகாப்புக்காக இரவு பகலாக அகழ் தோண்டினார்கள் முஸ்லிம்கள்! ஓரிடத்தில் பெரியதொரு பாறை! யாராலும் அதைத் தகர்க்க முடியவில்லை!**

**உடனே நபி (ஸல்)அவர்கள் கடப்பாறையைக் கையில் வாங்கி, பிஸ்மில்லாஹ் என்று ஓங்கி அடித்து மூன்றில் ஒருபகுதியை உடைத் தார்கள். அப்பொழுது - அல்லாஹு அக்பர்! ஷாம் தேசத்தின் திறவு கோல்கள் என்னிடம் ஒப்படைக்கப்பட்டன! இதோ! இங்கிருந்து கொண்டே அதன் செங்கோட்டைகளைக் காண்கிறேன் என்றார்கள்! மற்றொரு அடி கொடுத்து இன்னொரு பகுதியை உடைத்தார்கள். அப்பொழுது - அல்லாஹு அக்பர்! பாரசீகத்தின் திறவுகோல்கள் என்னிடம் ஒப்படைக்கப்பட்டன! இதோ! மதாயினை காண்கிறேன். இங்கிருந்து கொண்டே அதன் வெள்ளை மாளிகைகளைப் பார்க்கிறேன் என்றார்கள்! மூன்றாவது அடி கொடுத்துப் பாறையை முழுவதும் பெயர்த்தார்கள். அப்பொழுது - அல்லாஹு அக்பர்! ஏமனின் திறவுகோல்கள் என்னிடம் ஒப்படைக்கப்பட்டு விட்டன! அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இங்கிருந்தவாறே ஸன்ஆ நகரின் வாசல் களை காண்கிறேன் என்று சொன்னார்கள்!**

**இப்படிப்பட்ட நபியவர்களைத்தான் கைது செய்து அழைத்துவர அடியாட்களை அனுப்பி இருக்கிறான் பாரசீக மன்னன் குஸ்ரு பர்வேஸ்! பிறகு என்ன நடந்தது? என்னதான் நடக்கும்? அதைத் தான் இங்கே காணப் போகிறீர்கள் ...)**

**மக்கத்து வியாபாரிகள்:** (மக்கா நகர் திரும்பியதும் அங்குள்ள தலைவர்களைச் சந்தித்து மகிழ்ச்சி பொங்கக் கூறுகிறார்கள்) குறைஷிகளே! உங்களுக்காக ஒரு சந்தோசமான செய்தி கொண்டு வந்திருக்கிறோம்! அதா வது, தாயிப் நகரத்தில் வாட்டசாட்டமான இரண்டு அடியாட்களைச் சந்தித்தோம். அவர்கள் யஸ்ரிப் (மதீனா) நகருக்குச்) சென்று கொண்டிருந்தார்கள். பாரசீக மன்னன் குஸ்ரு பர்வேஸ்தான் அவ்விருவரையும் அனுப்பி இருந்தான். முஹம்மதை கைது செய்து பாரசீகத்திற்கு அழைத்துச் செல்ல வந்திருப்பதாகச் அவர்கள் சொன் னார்கள்.

ஆம்! முஹம்மதின் கொட்டத்தை அடக்குவதற்காக பாரசீக மன்னனே அடியாட்களை அனுப்பி வைத்து இருக்கிறான். இனி நம்முடைய முஹம்மதை - பாரசீக மன்னனே நன்கு கவனித்துக் கொள்வான்., இனி நமக்கு எந்தச் சிரமமும் இல்லை !

**குறைஷித் தலைவர்கள்:** (பெரும் மகிழ்ச்சியுடன்) மிகவும் சந்தோசமான செய்தியைக் கொண்டு வந்திருக் கிறீர்கள்! முஹம்மது சீக்கிரமாக எங்காவது இப்படி மாட்டிக்கொள்வார் என்று நாங்கள் எதிர்பார்த்துக் கொண்டுதான் இருந்தோம்! இங்கு நம்மிடம் வாய் நீளம் காட்டியது போல பாரசீக நாட்டிற்குச் சென்று ஏதாவது சொல்லியிருப்பார்! ... இஸ்லாத்திற்கு வாருங்கள். அல்லாஹு அக்பர் சொல் லுங்கள். சொர்க்கத் திற்குச் செல்லுங்கள் என்று ஏதாவது சொல்லியிருப்பார்! சரி சரி, நடக்கட்டும்! எப்படியாவது அவரது கொட்டம் ஒடுக்கப்படட்டும்! எந்த வகையிலாவது நல்ல காரியம் நடந்தால் சரிதான்!

**(இங்கே மதீனத்து பள்ளிவாசலில் நபி (ஸல்) அவர்களும் பிற தோழர்களும் அப்துல்லாஹ் பின் ஹு தா:.பா (ரலி) அவர்களிடம் சூழ்நிலையில் ...)**

**ஒரு தோழர்:** (அவசர அவசரமாக உள்ளே வந்து) அல்லாஹ்வின் தூதர் அவர்களே! உங்களைச் சந்திப்பதற்காக இரண்டு மனிதர்கள் வந்திருக்கிறார்கள் .... அவர்கள் ஏமன் தேசத்தில் இருந்து வருகி றார்களாம் ...

**நபி (ஸல்) அவர்கள்:** அவர்களை உள்ளே வரச் சொல்லுங்கள்.

(ஏமன் நாட்டு ஆளுநர் பாதானின் இரண்டு நபர்களும் உள்ளே வருகிறார்கள். அவர்களின் வாட்டசாட்டமான தோற்றத்தை நபித் தோழர்கள் ஆச்சரியத்துடன் பார்க்கிறார்கள். முகம் மழுமழு என மழிக்கப்பட்டிருந்தன. முறுக்கிவிடப்பட்ட முரட்டு மீசைகள்! அவ்விருவரையும் பாரசீக மன்னன் நல்ல தீனி போட்டு வளர்த்திருந்தான், இங்கே சில கிராமத்து மக்கள் ஜல்லிக்கட்டுக் காளைகளையும் சண்டைக் கோழிகளையும் தீனி போட்டு கொழுகொழுவென - வாட்டசாட்டமாக வளர்கிறார்களே அந்த மாதிரி ...)

**நபி (ஸல்) அவர்கள்:** நீங்கள் இருவரும் யார்? எங்கிருந்து வருகிறீர்கள்?

**வந்தவர்களில் ஒருவர்:** நாங்கள் ஏமன் நாட்டிலிருந்து வருகிறோம்.

**நபி (ஸல்) அவர்கள்:** (அவ்விருவரின் முரட்டு மீசைகளையும் நன் றாக மழிக்கப்பட்டிருந்த முகத்தையும் கவனித்தவாறு) இதென்ன பழக்கம்? இப்படிச் செய்யுமாறு யார் உங்களுக்குச் சொன்னது?

**வந்தவர்களில் ஒருவர்:** எல்லாம் எங்கள் இரட்சகனின் கட்டளைதான்!

**நபி (ஸல்) அவர்கள்:** உங்கள் இரட்சகன் என்றால் ... ?

**வந்தவர்களில் ஒருவர்:** வேறு யார்? பாரசீக மன்னன்தான்! வணக்கத்திற்குரிய இறைவன், அதிபதி எல்லாமே எங்களுக்கு அவன்தான்!

**நபி(ஸல்)அவர்கள்:** அப்படியா?...இப்பொழுது இங்கு எதற்காக வந்துள்ளீர்கள்? உங்களின் நோக்கம் என்ன?

**வந்தவர்களில் ஒருவர்:** ஏமன் நாட்டு ஆளுநர்தான் எங்களை இங்கு அனுப்பி வைத்திருக்கிறார். முஹம்மது நபி என்பவரை கைது செய்து பிடித்துக்கொண்டு வர வேண்டுமென பாரசீக மன்னன் கட்டளை பிறப்பித்தான்! அதனை நிறைவேற்றுவதற்காகத்தான் - முஹம்மதை கைது செய்து பிடித்துச் செல்வதற்காகத்தான் வந்திருக் கிறோம் ...

இதோ! கடிதம். ஏமன் நாட்டு ஆளுநர் கொடுத்தது. (ஒரு கடிதத்தை நபியவர்களிடம் நீட்டுகிறான். நபியவர்களும் அதைப் வாங்கிக்கொள்கிறார்கள்.

(தொடர்ந்து சொல்கிறான்:) எனவே ... இங்கே நீங்கள்தானே முஹம்மது நபி! உடனே எங்களுடன் பாரசீகம் புறப்படுங்கள். எங்களுடன் நீங்கள் வர மறுத்தால் ...!பிறகு என்ன நடக்கும் என்று சொல்ல முடி யாது! பாரசீக மன்னன் எவ்வளவு வலிமை உடையவன் என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம்தான்! யாரையாவது தண்டிக்க வேண்டும் என அவன் தீர்மானித்து விட்டால் அதை எவராலும் தடுக்க முடியாது! நினைத்ததைச் செய்து முடிக்கும் அளவுக்கு படைபலம் உடையவன்! எனவே நன்கு சிந்தித்துச் சீர்தூக்கிப் பார்த்துக் கொள்ளும்!

(அந்த இருவரும் நபி (ஸல்) அவர்களை கைது செய்ய வந்திருப்பதாகச் சொன்னதையும் அலட்சியமாக - கண்ணியக் குறைவாகப் பதில் அளித்ததையும் கண்டு நபித்தோழர்கள் திகைப்படைகிறார்கள். அவர்களால் பொறுமையாக இருக்க முடியவில்லை. ஆவேசப்படுகிறார்கள். ஆத்திரப்படுகிறார்கள். ஆனாலும் நபி(ஸல்) அவர்கள் அனைவரையும் அமைதிப்படுத்தியவாறு பொறுமையாகப் பதில் சொல்கிறார்கள்)

**நபி (ஸல்) அவர்கள்:** ஓ! இதற்காகத்தான் வந்திருக்கிறீர்களா? சரி, பரவாயில்லை! இப்போது நீங்கள் இருவரும் உங்கள் கூடாரத்திற்குச் சென்று நிம்மதியாக ஓய்வு எடுங்கள். நாளை காலையில் என்னிடம் வாருங்கள். பேசிக் கொள்ளலாம்.

(அவ்வாறே அவ்விருவரும் கூடாரங்களுக்குத் திரும்பிச்செல்கிறார்கள்)

- திரை விழுகிறது -

## காட்சி 5

## பங்கு பெறுவோர்

**நபி(ஸல்)அவர்கள், நபித்தோழர்கள், ஏமன் ஆளுநர் பாதான், அவனுடைய இரு அடியாட்கள், அரசவைப் பிரமுகர்கள்.**

**(பின்னணிக்குரல்: முஹம்மது நபி (ஸல்) அவர்களின் வாழ்வில் அப்படி ஓர் அதிசயம் நடந்தது! அது என்ன அதிசயம்!! எப்பொழுது நடந்தது? எங்கு நடந்தது? ...**

**நபியவர்களின் 40 வது வயதில் நடந்தது! மக்கமா நகரின் அரு கிலுள்ள ஜபலுந்நூர் எனும் மலையின் ஹிரா குகையில் புனித ரமளான் மாதத்தின் ஓர் இரவில் அந்த அதிசய நிகழ்ச்சி நடந்தது!**

**மலை உச்சியில் உள்ள அந்தக் குகையில் நபியவர்கள் தனிமையில் தங்கியிருந்தபோது - அவர்கள் முன்னிலையில் மிகப் பெரிய ஒளிப்பிரவாகத்துடன் ஜிப்ரீல் எனும் மலக்கு தோன்றி -**

**ஓதுவீராக! படைத்த உம் இறைவனின் திருப்பெயர் கொண்டு (ஓதுவீராக) என்று ... திருக்குர்ஆனின் முதல் ஐந்து வசனங்களை ஓதிக்காட்டினார்.**

**அன்று வரை அப்துல்லாஹ்வின் புதல்வர் என்று அறியப்பட்ட முஹம்மது அவர்கள், அதன் பிறகு அல்லாஹ் வின் திருத்தூதர் (ஸல்) எனும் சிறப்பைப் பெற்றார்கள்!**

**ஆம்! இப்பேரண்டத்தைப் படைத்துப் பரிபாலிப்பவனாகிய இறைவனிடம் இருந்து அவர்களுக்குச் செய்திகள் வரத் தொடங்கியது! மனித வாழ்க்கைக்குத் தேவையான வழிகாட்டுதல்களை மட்டுமல்ல, தேவைப்பட்டால் - நிகழும் நிகழ்ச்சிகளின் இரகசியப் பின்னணியையும்கூட அவ்வப்போது ஜிப்ரீல் எனும் மலக்கு நபியவர்களுக்கு அறிவித்துக் கொண்டிருந்தார்!**

**இவ்வாறாக வானுலகத்துடன் நபி (ஸல்) அவர்களுக்கு இருந்த தொடர்பை - தூதுத்துவ உண்மையை வெளிப்படுத்தும் பல நிகழ்வுகள் நபி வரலாற்றில் பதிவாகியுள்ளன. அன்று அந்நிகழ்ச்சிகளைக் கண்ட மக்கள், இறைவன் அனுப்பிய உண்மைத் தூதர்தாம் என நபியவர்கள் மீது நம்பிக்கைகொண்டு இஸ்லாத்தில் இணைந்து கொண்டே இருந்தார்கள். அத்தகைய ஒரு நிகழ்ச்சி இப்பொழுதும் நடைபெறுகிறது. மக்கள் கூட்டம் கூட்டமாக இஸ்லாத்தில் இணைகிறார்கள். இதோ! காணுங்கள், அந்தக் காட்சிகளை! ...)**

(ஆளுநர் பாதானின் ஆட்கள் மறுநாள் காலையில் நபி (ஸல்) அவர்களிடம் வந்தார்கள்)

**பாதானின் ஆட்கள்:** என்ன, முஹம்மதே! புறப்படத் தயாராகி விட்டீரா? பாரசீக மன்னன் உங்களை அழைத்து வரச் சொல்லி எங்களை அனுப்பி இருக்கிறானே, அவனுக்கு நாங்கள் பதில் செல்ல வேண்டுமே! எனவே சீக்கிரம் புறப்படுங்கள், (இவ்வாறு நபி (ஸல்) அவர்களின் சமூகத்தில் அவமரியாதையாகப் பேசினார்கள். அலட்சியமாக அவசரப்படுத்தினார்கள்)

**நபி (ஸல்) அவர்கள்:** எங்கே புறப்படுவது ...? இனி எக்காலமும் பாரசீக மன்னனை உங்களால் பார்க்க முடியாது! அவன் கொலை செய்யப்பட்டு விட்டான்! ...

**பாதானின் ஆட்கள்:** ????

**நபி (ஸல்) அவர்கள்:** ஆம்! அதற்கான ஏற்பாட்டை எல்லாம் வல்ல இறைவனாகிய என் இரட்சகனே செய்து காரியத்தை கன கச்சித மாக முடித்து விட்டான். மன்னனின் மீது அவனுடைய மகனையே கோபம் கொள்ளச்செய்தான். சர்வ அதிகாமும் படைத்த தனது தந்தையைத் தனையனே கொலை செய்து விட்டான் ... என்னை கைது செய்வதற்காக உங்களை அனுப்பிய மன்னன் இப்பொழுது உயிருடனே இல்லை...! பிறகு நான் எங்கே வருவது, யாரைச் சந்திப்பது, உங்களுடன் வந்து ...?

(இதனைக் கேட்டு அவ்விருவரும் திடுக்கிடுகிறார்கள், கண்களை அகல விரித்து ஆச்சரியத்துடன் நபிகள் நாயகம்(ஸல்) அவர்களைப் பார்க்கிறார்கள்)

**பாதானின் ஆட்கள்:** என்ன சொல்கிறீர்? சொல்வதை நன்கு யோசித்துத்தான் சொல்கிறீரா? ... வாயில் வந்தபடி பேசுகிறீரா? எங்களுடன் வருவதைத் தவிர்ப்பதற்காகத்தான் இவ்வாறு கதை அளக்கிறீரா? எதையாவது சொல்லித் தப்பிக்கப்பார்க்கிறீரா? ... நீர் சொல்வதை எங்கள் ஆளுநர் பாதானிடம் நாங்கள் தெரிவிக்கட்டுமா?

**நபி (ஸல்) அவர்கள்:** ஓ! தாராளமாகத் தெரியப்படுத்துங்கள். இன்னொன்றையும் சேர்த்துச் சொல்லுங்கள். அதாவது, பாரசீகத்தில் எந்த எந்த பகுதிகளிலெல்லாம் உங்களது மன்னனின் ஆட்சியதிகாரம் பரவி இருக்கி றதோ அங்கெல்லாம் விரைவிலேயே எனது இஸ்லாமிய மார்க்கம் சென்றடையும் என்பதையும் தெளிவாக அந்த ஆளுநரிடம் எடுத்துச்சொல்லுங்கள்! ...அது மட்டுமல்ல! நான் சொன்னதாக இன்னொரு முக்கியமான விஷயத்தையும் சொல்லுங்கள். அதாவது,

**எனது மார்க்கத்தை - இஸ்லாத்தை நீர் ஏற்றுக்கொண்டால் உனது கைவசம் உள்ள அதிகாரம் முழுவதை யும் உன்னிடமே ஒப்படைப்பேன். உனது மக்களை நீயே ஆட்சி செய்யும் வகையில் உன்னையே ஆட்சியா ளனாக ஆக்குவேன் -** எனது இந்த உறுதி மொழி யையும் அவரிடம் தெரியப்படுத்துங்கள்.

(பாதானின் ஆட்கள் இருவரும் எதுவும் புரியாமல் திகைக்கிறார்கள். தயங்கித் தயங்கி அங்கிருந்து கிளம்புகிறார்கள், ஏமனை நோக்கி)

**ஏமன் ஆளுநர் பாதான்:** (தன்னுடைய ஆட்கள் வெறுமெனே பதற்றத்துடனும் சோர்வுடனும் வருவதைக்கண்டு பாதான் திகைப் படைகிறான்) என்ன வெறுமெனே வருகிறீர்கள்? முஹம்மது எங்கே? அவரை கைது செய்து உங்களுடன் அழைத்து வர வில்லையா?

**அடியாட்களில் ஒருவர்:** அவரை எங்கே கைது செய்வது? திடுக்கிடும்படியான செய்தி ஒன்றை அவர் சொல்கிறாரே!... பாரசீக மன்னரை அவருடைய மகனே கொலை செய்து விட்டதாகச் சொல்கிறாரே! ...

**ஏமன் ஆளுநர் பாதான்:** (மிகவும் திடுக்கிட்டவராக) என்ன சொல்கிறீர்கள்? பாரசீக மன்னனைக் கொன்று விட்டார்களா? யார் கொன்றது? யார் சொன்னது?

**அடியாட்களில் ஒருவர்:** முஹம்மதுதான் சொல்கிறார்!இனி உங்கள் மன்னரை நீங்கள் உயிருடன் காண முடியாது! கொலை செய்யப்பட்டு விட்டார் என்கிறார்! அவருடைய மகனே அவரைக் கொலை செய்து விட்டாராம்! அதனால்தான் என்ன செய்வது என்று எதுவும் புலப்படாமல் வெறுமெனே திரும்பி வருகிறோம்! முஹம்மது  மதீனாவில் இருந்து கொண்டு, அதிர்ச்சிக் குரிய இந்தச் செய்தியை அவர் சர்வ சாதாரணமாக சொல்கிறாரே! என்ன செய்வது? ...

**ஏமன் ஆளுநர் பாதான்:** முஹம்மது இவ்வாறு சொன்னாரா? அவர் சொன்னார் என்றால் அதை எப்படி ஏற்றுக் கொள்ள முடியும்? நீங்கள் ஏன் அவரைக் கைது செய்யாமல் சும்மா வந்தீர்கள்? முதலில் இதற்குப் பதில் சொல்லுங்கள் ...! அப்படியே வைத்துக் கொண்டாலும் அவருக்கு எப்படித் தெரிந்தது இந்தச் செய்தி?

**அடியாட்கள் இருவரும்:** எப்படி கைது செய்வது? இனி நீங்கள் பாரசீக மன்னனைப் பார்க்க முடியாது என்கிறாரே! நான் உங்களுடன் வந்து யாரைச் சந்திப்பது என்று கேட்கிறாரே! அதற்கு என்ன பதில் சொல்வது?

**அடியாட்களில் மற்றொருவர்:** அது மட்டுமா சொல்கிறார்?

**ஏமன் ஆளுநர் பாதான்:** (பதற்றத்துடன்) இன்னும் என்ன சொல்கி றார்? விவரமாகச் சொல்லுங்கள்!

**அடியாட்கள் இருவரும்:** அவர் கொண்டுவந்துள்ள புதிய மதத்தை - மார்க்கத்தை நீங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டுமாம். அப்படி ஏற்றுக்கொண்டால் உம்மை உமது ஆட்சியில் நீடிக்கச் செய்வாராம். இதையும் உங்களிடம் தெரியப்படுத்தச் சொன்னார்.

இது மட்டுமல்ல இன்னும் சொன்னார்: இந்தப் பாரசீக நாடு முழுவதும் அவரது மதம்தான் எதிர் காலத்தில் பரவுமாம்!

**அடியாட்களில் ஒருவர்:** ஆளுநர் அவர்களே! எங்களுக்கு ஒரே குழப்பமாகி விட்டது! பாரசீக மன்னன் கொலை செய்யப்பட்ட செய்தியை ஏமனின் ஆளுநரிடம் நாங்கள் தெரியப்படுத்தலாமா என்றும் கேட்டோம். அப்போது தான் - இந்த விஷயங்களை எல்லாம் சொன்னார்.

**ஏமன் ஆளுநர் பாதான்:** (சிம்மாசனத்தில் இருந்து கீழே இறங்கி குறுக்கும் நெடுக்குமாக நடக்கிறார். மனத்திற்குள் மெதுவாகச் சொல்கிறார்: எல்லாமே புரியாத புதிராக இருக்கிறதே! ... அப்படியே இருந்தாலும் பாரசீக மன்னன் கொலை செய்யப்பட்ட செய்தி நமக்குத் தெரியாமல் அவருக்கு எப்படித் தெரிந்தது? அவர் சொல்கிறார் என்றால் எப்படிச் சொல்கிறார்? பொய் சொல்கிறாரா? அவரது மதத்தை ஏற்றுமாறு நம்மையும் அழைக்கிறாரே! ஒரே குழப்பமாக இருக்கிறதே!

**ஏமன் ஆளுநர் பாதான்:** இவர்கள் இருவரும் முஹம்மதை கைது செய்யத்தானே மதீனா சென்றார்கள்? பிறகு இப்படிச் சொல்லிக் கொண்டு வருகிறார்களே, என்ன செய்வது?

(அப்படிப் பேசிக்கொண்டிருக்கும்போதே கடிதத்துடன் ஓர் ஆள் தர்பாரில் நுழைகிறார்)

**ஆளுநர் பாதான்:** (கடிதத்தை வாங்கியவாறு) நீ எங்கிருந்து வருகிறாய்? கடிதம் யார் கொடுத்தது?

**வந்த நபர்:** பாரசீகத்தின் புதிய மன்னர் ஷேரவைஹ் கொடுத்து அனுப்பிய கடிதம் இது!

(அதனைக் கேட்டு பாதானின் இரண்டு அடியாட்கள் உள்பட தர்பாரில் நிறைந்திருந்த பிரமுகர்கள் அனைவரும் பெரும் அதிர்ச்சி அடைகிறார்கள். ஒருவரை ஒருவர் பீதியுடன் பார்த்துக் கொண்டிருக் கிறார்கள்)

**ஆளுநர் பாதான்:** (பதற்றத்துடன் கடிதத்தைப் படித்துப் பார்க்கி றார். அதில் எழுதப்பட்டிருந்தது:

**நான் குஸ்ரு பர்வேஷை கொன்று விட்டேன். நமது நாட்டு மக்களுக்கு பல வகையில் அவர் துரோகம் செய்து வந்தார். அவ ருக்குப் பிடிக்காதவர்களையெல்லாம் கொன்று குவித்தார். அவர்கள் எவ்வளவு பெரிய மேன்மக்களாக இருந்தாலும் பொருட்படுத்தாமல் அவர்களின் உயிரைப் பறித்தார்! மேலும் பெண் பிள்ளைகளை யெல்லாம் சிறையில் அடைத்துத் துன்புறுத்தினார்! இந்தக் கொடுஞ்செயலுக்குப் பழிவாங்கத்தான் மன்னரை**

**நான் கொலை செய்தேன். இந்த எனது கடிதம் உன்னிடம் வந்ததும் நீயும் உனது அதிகாரத் திலுள்ள மக்கள் அனைவரும் எனக்குக் கீழ்ப்படிந்திட வேண்டும்.**

**பாதான்:** (ஷேரவைஹ் எழுதிய கடிதத்தை முழுவதும் படித்து முடித்ததும் குஸ்ரு பர்வேஸ் மன்னன் கொலை செய்யப்பட்ட செய்தியையும் அவனுடைய புதல்வரே புதிய மன்னனாக பதவி ஏற்ற தையும் அனைவருக்கும் தெரியப்படுத்துகிறார்.

**பாதான்:** (பிறகு ஏதோ சிந்தித்தவாறு ... வந்த கடிதத்தைத் தரையில் வீசி எறிகிறார். பிறகு தர்பாரிலுள்ள அனைவரையும் முன்னோக்கி) பாரசீக மன்னரை அவருடைய மகனே கொலை செய்த செய்தி எனக்கு வரு வதற்கு முன்னதாக ...மதீனாவில் இருந்து கொண்டே முஹம்மது அறிவிக்கிறார் என்றால் ... இது இப்பொழுது உண்மையாகிவிட்டது என்றால் ... என்ன அதிசயம் இது? இதில் ஏதோ இரகசியம் உள்ளது! ஆம்! முஹம்மது உண்மையான நபிதான் - அல்லாஹ் அனுப்பி வைத்த திருத்தூதர்தான்! எனவே அவர் கொண்டு வந்துள்ள புதிய மதத்தை -சத்திய சன்மார்க்கத்தை - இஸ்லாத்தை நானும் உளப்பூர்மாக ஏற்றுக் கொள்கிறேன்.

ஏனெனில் எந்த இறைவனிடம் இருந்து தமக்கு இரகசியச் செய்தி வருகிறது என்கிறாரோ, எந்த இறை வனிடம் இருந்து தமக்கு வேதம் அருளப்படுவதாகச் சொல்கிறாரோ அந்த எல்லாம் வல்ல இறைவனின் உதவி இல்லாமல் இந்தச் செய்தியை அவர் தெரிந்திருக்க முடியாது! அறிவித்திருக்க முடியாது! எனவே அவர் கொண்டு வந்துள்ள இஸ்லாம் உண்மையான மதமாகத்தான் இருக்க முடியும்! அப்படிப்பட்ட சத்திய சன்மார்க் கத்தை நாம் புறக்கணிக்க முடியாது! அப்படிப் புறக்கணிப்பது புத்திசாலித்தனமல்ல! இதோ! இப்பொழுதே அந்த மார்க்கத்தில் நான் இணைந்து விடுகிறேன்!

(அதன் பிறகு அவரைப் பின்பற்றி ஏமனில் வாழ்ந்து வந்த பாரசீக மக்களும் படிப்படியாக இஸ்லாத்தில் இணைகிறார்கள்)

# ஆதார நூல்கள்


**1) ஸஹீஹு ல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்**

**2) ஸஹீஹு ல் புகாரியின் விரிவுரை ஃபத்ஹு ல் பாரி**

**3) தப்ஸீர் இப்னு கதீர்**

**4) ஸு வரும் மின் ஹயாத்திஸ் ஸஹாபா**

**5) ஷைக் முஹம்மது கிள்ரீ பேக் அவர்களின் தாரீகுல் உமமில் இஸ்லாமிய்யா**

**6) டாக்டர் அப்துர் ரஹ்மான் உமைரா அவர்களின் ரிஜாலுன் அன்ஸலல்லாஹு ஃபீஹிம் குர்ஆனன்**